

# மணிவிளக்கு பொருளடக்கம்

மலர் : 1] முஹர்ரம் 1374 செப்டம்பர் 1954 [இதழ் : 6



**கதைகளில் வரும் பெயர்கள் கற்பனையே**

தனி இதழ் உள் நாடு 6 அணா வெளி நாடு 8 அணா

# எது இன்பம்?

★

எதுதான் இன்பம் உலகில்
இயம்பாய்; "கதிரும் மதியும்
மதுவும் மங்கைய ரும்நல்
மலரும் இன்பம்" என்பாய்.

★

புலரும் சுடரும் இருளில்
புகுவான்; மதியும் தேயும்;
அலரும் மலரும் வாடும்
அரிவையர் எழிலும் ஓடும்.

★

எதுதான் நிலையா யுறையும்?
எதுவும் இல்லை; இன்பம்
எதிலே என்றும் நிற்கும்?
எதிலும் நில்லா தென்பாய்.

★

இன்பம் தந்திடும் எதுவும்
உனைவிட் டேகும் போது
துன்பம் தந்திடு மன்றோ?
சொல்வாய் பின் எது இன்பம்?

★

இன்பமே இலையோ? என்பாய்,
இருக்கிற தழியா இன்பம் :—
"இன்பம் துன்பம் என்ற
எண்ண மொழித்திடல் இன்பம்."

★

"இபுனு ஜமாலுத்தீன்."



# புத்தாண்டு பிறந்தது!

இஸ்லாமிய ஆண்டின் முதல் மாதமான முஹர்ரம் பிறந்தது.

இஸ்லாமியப் புத்தாண்டு வீரர்கள் பலரின் நினைவையும், அவர்கள் தம் தியாகத்தையும் நினைவூட்டிக் கொண்டே பிறக்கிறது.

இஸ்லாமிய சரித்திரத்திலே இணையற்ற வீரராக, திறமை மிக்க ஆட்சியாளராக, வரலாறு போற்றும் நிர்வாகப் பெருந்தகையாக வாழ்ந்த உத்தமர் உமறுல் பாரூக் (ரலி) துல் ஹஜ் மாதம் 26-ஆம் தேதி குரோதம் கொண்ட கொடியோன் ஒருவனால் தாக்கப்பட்டார்கள். இதன்பின் சில நாட்களே உயிர் வாழ்ந்திருந்த அம்மாவீரர் முஹர்ரம் முதல் தேதி உயிர் நீத்தார்கள்.

உளத்திண்மையும், மதி நுட்பமும் படைத்த உமறுல் பாரூக் (ரலி) அவர்களின் நினைவு இப்புத்தாண்டிலே பசுமையாகிறது.

புனிதமான இம் முஹர்ரம் மாதத்தின் எண்ணத்தை மக்கள் மனத்திலே மாருமல் பதிய வைத்திருக்க வழி செய்த சம்பவம் கர்பலா.

கர்பலாக் களத்திலேதான் முடியாட்சிக்கும், குடியாட்சிக்கும் முதன் முதலில் மோதல் ஏற்பட்டது.

நாயகத் திருமேனி நபி (ஸல்) அவர்கள் பேரர், மாதருக்கரசி, பெண் குலத்தின் பெரு விளக்கு பாத்திமா நாச்சியாரவர்களின் திருமகனார், நினைத்தாலே பகைவர் நெஞ்சங் கலங்கும் நிறைவீரர் அலீ அஸதுல்லாஹ் (ரலீ) அவர்களின் குலக் கொழுந்து, ஹலரத் ஹுஸைன் (ரலி) கர்பலாக் களத்திலே குடியாட்சியின் பிரதிநிதியாக தம் மிகச் சிறு படையினருடன் நிற்கிருர்கள்.

அவர்களை எதிர்த்து முடியாட்சியின் சின்னமாக யஸீதின் தளபதிகள் பெரும் படையுடன் அக்களத்திலே காத்திருக்கிருர்கள்.

யஸீது ஏறக்குறைய மூன்று ஆண்டுகளே ஆட்சி செலுத்தினுன். முதலாண்டிலே பெருமானுரவர்களின் குடும்பத்தினரைப் போர்க்களத்திலே நிறுத்தினுன். இரண்டாமாண்டு பெருமானுரை வாழ்த்தி வரவேற்ற மதீனு நங்நகரை முற்றுகையிட்டான். மூன்ருவதாண்டு பெருமானுரைப் பெற்றுப் பெருமை கண்ட புனித மக்காவின்மீதே படையெடுத்தான்.

இத்தகைய கொடியோனின் இரக்கமற்ற இராணுவத் தலைவர்களை ஒரு மிகச் சிறிய கூட்டம் கர்பலாக் களத்திலே எதிர்த்து நின்றது. நபி பெருமானுரின் குடும்பத்தினரில் எஞ்சியவரைக் கொண்ட அச் சிறு குழு, யஸீதையும், அவன் படையினரையும் கண்டு பயந்து விடவில்லை.

தங்கள் உயிரைக் கொடுத்தாவது, யஸீதின் கொடுங்கோன்மையை ஒழிக்க வழி கோல வேண்டும் என்பது அவர்களின் பிறழாத உறுதி.

கர்பலாக் களத்திலே காத்திமுந் நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தினர் ஒவ்வொருவராக வீழ்ந்தனர். கடைசியில் ஹலரத் ஹுஸைன் (ரலி) அவர்களும் வீர மரணம் எய்தினர்கள். வீரத் தியாகியின் சிறு குழந்தை ஜைனுல் ஆபிதீன் என்பாரைத் தவிர ஆண்கள் யாருமே மிஞ்சவில்லை.

தியாகப் பிழம்பு ஹுஸைனின் (ரலி) தலையை ஈட்டியிலே குத்தி எடுத்துச் சென்று, யஸீதின் முன்னே வைத்தான் கொடியோன் ஒருவன். யஸீதின் கண்கள் கூட கலங்கிற்றும்! "பெருமானரின் உதடுகள் இம் முகத்தை முத்தமிடப் பார்த்திருக்கின்றேன்" என்று ஹுஸைன் (ரலி) அவர்களின் தலையைப் பார்த்து கண்ணீர் உகுத்தார் ஒரு முதியவர்.

யஸீதின் கொடுங்கோலாட்சி இதற்குப் பின்னர் வெகு காலம் நீடிக்கவில்லை! அவன் குடும்பத்தினர் அதிகாரமும் அதிக நாள் செல்லவில்லை. அவன் மறைந்து விட்டான்; ஆனல் அவன் செய்த கொடுமை மறையவில்லை. அவன் ஆட்சி அழிந்து விட்டது; ஆனல் அவன் ஆட்சி இஸ்லாமிய சரித்திரத்தில் ஏற்படுத்திய மாசு அழியவில்லை.

கர்பலாக் களத்திலே மடிந்த ஹுஸைன் (ரலி) அவர்களை உலக மக்கள் தம் உளத்திலே நிறுத்திக் கொண்டார்கள்.

வீரம் என்ருல் ஹலரத் ஹுஸைனின் நினைவு வருகிறது; தியாகம் என்ருலும் அவர்களின் நினைவுதான் நெஞ்சத்திரையிலே பளிச்சிடுகிறது. அந்த மாவீரர் மறைந்த நாளும் இப்புத்தாண்டின் முதல் மாதமான முஹர்ரத்தில்தான்.

கர்பலாக் களத்திலே அவர்கள் செய்த தியாகம் வீண் போகவில்லை. நாட்டின் பல பாகங்களிலே மக்கள் கொதித்தெழுந்தனர். உமய்யாக்கள் ஆட்சிக்குத் தலைவலி எடுத்தது. ஹலரத் ஹுஸைனின் தியாகத்திற்கு நிலைக்களனக இருந்த கர்பலா, உமய்யா ஆட்சியின் அழிவுக்கும் அடி கோலியாகவே இருந்தது. இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் தியாகத்தின் பலனக இஸ்லாம் புதுவலிமை பெற்றது.

இதை அழகுற எடுத்துக் கூறுகிருர்கள் மவ்லான முஹம்மது அலீ ஜவ்ஹர் (ரஹ்):

"இஸ்லாம் ஸிந்தா ஹோத்தா ஹே ஹர் கர்பலா கே பஃத்"

"ஒவ்வொரு கர்பலாவுக்குப் பின்னரும் இஸ்லாம் புத்துயிர் பெறுகிறது" என்று அவர்கள் வர்ணிக்கிருர்கள்.

இந்த மகத்தான தியாகத்தை நம் நினைவுக்குக் கொண்டுவரும் முஹர்ரம் மாதத்தோடு புத்தாண்டு துவங்குகிறது.

இப்புனித மாதத்திலே தியாகச் செயல் புரிந்த மாவீரர்களின் நாமங்கள் விண்ணும், மண்ணும் நிலைக்கும் காலமெல்லாம் நிலைத்து நிற்கும்.



# மீண்டும் சிந்தியுங்கள்

சென்னை இராஜ்ஜிய சர்க்காரிடம் வேலை தேடும் ஊழியர்கள் இனி இரண்டாம் மொழியாக தமிழ் கற்று எஸ். எஸ். எல். ஸி. யில் தேறியவர்களாக இருக்க வேண்டும் என்று, சென்னை சர்க்கார் ஓர் உத்தரவு பிறப்பிக்கப் போவதாகத் தெரிகிறது. இது உண்மையானல், வருந்தத் தக்கதொரு முடிவாக இது இருக்கும் என்றஞ்சுகிறோம்.

தமிழார்வமும் தமிழ் வளர வேண்டும் என்ற ஆசையும் நமக்கும் உண்டு. ஆனல் நம் மொழிப்பற்று பிற மொழியினருக்கு வேதனை தரும் முறையிலே இருக்கக்கூடாது, அது தமிழ்ப் பண்பாடல்ல என்பதை உணர்ந்து தான் இதைக் குறிப்பிடுகிறோம்.

சென்னை இராஜ்ஜியத்தின் தமிழ்ப் பகுதிகளிலே உர்தூ மூலம் கல்வி போதிக்கப்படும் பள்ளிகளும் இருக்கின்றன. அங்கு பயிலும் மாணவர்களில் பலர் உர்தூவையே துணை மொழியாக எடுத்துப் படிக்கின்றுர்கள். ஆகவே அவர்களுக்கு இந்த உத்தரவு அமுல் நடத்தப்பட்டால் கஷ்டத்தை விளைவிக்கும் என்பது தெளிவு.

நம் நாட்டு அரசியலமைப்பு விதிகளின்படி சிறுபான்மையினரின் மொழிகளுக்கு பாதுகாப் பளிக்கப்படும் என்று உறுதி கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது உர்தூவை இரண்டாம் மொழியாகக் கொண்டு பயிற்சி பெறும் மாணவர்களுக்கு அரசாங்க வேலைகள் மறுக்கப்படுவதன் மூலம் அவ்வுறுதிக்கு ஊறு செய்யப்படுகிறது.

நாம் இப்படிக் கூறும்பொழுது, வட்டார மொழியான தமிழையும் இவ்விராஜ்ஜியத்தின் தமிழ்ப் பகுதியில் வாழ்வோர் கற்பதின் அவசியத்தை உணராமலில்லை. ஆகவே இதற்கு ஒரு கால வரையறை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அதாவது பத்தாண்டு காலத்திற்கப்புறம் தமிழைத் துணை மொழியாகக் கொண்டு எஸ். எஸ். எல். ஸி. யில் தேறுபவர்களுக்கு பொதுவே சென்னை இராஜ்ஜிய தமிழ்ப் பிராந்தியங்களில் அரசாங்க வேலைகள் தரப்படும் என்று முடிவு கட்டுவதன் மூலம், மாணவர்களுக்கு தமிழைக் கற்றுக்கொள்ள தகுந்த சந்தர்ப்பம் அளிக்கலாம்.

முதலமைச்சர் கனம் காமராஜ நாடார் முஸ்லிம்கள் மனப்போக்கை நன்கறிவார். நிலையான ஆட்சி முறைக்காக, முஸ்லிம்கள் அவரைப் பெருவாரியாக ஆதரித்து வருகிருர்கள். ஆகவே அவர்களின் நியாயமான இக்கோரிக்கைக்கு அவர் ஆட்சிக் காலத்திலே மதிப்புத் தரப்படும் என்று உறுதியாக நம்புகிறோம்.

# பாராட்டுகிறோம்

'மணி விளக்கின்' கௌரவ இலக்கிய ஆசிரியரான ஜனப் கா. அப்துல் கபூர் ஸாஹிப் அவர்களை நம் வாசகர்கள் நன்கறிவார்கள். திருச்சி ஜமால் முஹம்மது கல்லூரியின் மொழித்துறைத் தலைவராகவும், தமிழ்ப் பேராசிரியராகவும் பணியாற்றிவரும் இத்தமிழறிஞர் சொல்லின் செல்வராகவும், சிறந்த எழுத்தாளராகவும் புகழ் ஈட்டியிருக்கிறர்

சென்னைப் பல்கலைக் கழக 'அக

டமிக் கவுன்ஸிலுக்கு' அண்மையில் நடந்த தேர்தலில் அவர்கள் பெருவாரியான வாக்குகள் பெற்றுத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற மங்கலச் செய்தி கேட்டு மகிழ்வுறுகிறோம்.

தேர்விலே வெற்றி பெற்ற அறிஞரையும், அன்னாரின் சேவையைப் பெறப் போகும் சென்னைப் பல்கலைக் கழகத்தையும் நாம் பாராட்டுகிறோம்!

## திருக் குர்ஆன் முழக்கம்

உலகின் ஒப்பற்ற திருவேதமாகிய திருக் குர்ஆனைத் தமிழகத்திலே நல்ல முறையில் அறிமுகப் படுத்துவதற்காகத் தோன்றியது திருக் குர்ஆன் இயக்கம். தமிழகத்திலும், இலங்கையிலும் அடக்கமான முறையில் அரிய தொண்டியற்றும் இவ்வியக்கத்தினரின் சேவை மெச்சத் தகுந்தது.

அபிராம நத்தம் திருக் குர்ஆன் இயக்கக் கிளையினர் தமது இரண்டாவது மாநாட்டை அக்டோபர் 2, 3 தேதிகளில் பயனுள்ள வகையில் நடத்தத் திட்டமிட்டிருப்பதை அறிய மகிழ்ச்சியடைகிறோம். சென்ற ஆண்டு சிறப்புற நடந்த மாநாடு அந்த வட்டாரத்தில் மதத் துறையில் நல்ல விழிப்புணர்ச்சியை ஏற்படுத்திற்று. இராமநாதபுரம் ஜில்லா வாசிகளின் பூரண ஒத்துழைப்புடன் நடக்க இருக்கும் இம்மாநாடு நிலையான பயன் தரும் வகையில் அமைய வல்லவன் அருள்வானாக.

## மீரட் மவ்லானா

மீரட் மவ்லானா என்று எங்கும் அறியப்படும் மவ்லானா அப்துல் அலீம் ஸித்தீக்கி ஹஜ்ஜுக்குச் சென்றிருந்த இடத்தில் ஆகஸ்டு மாதம் 22-ஆம் தேதி மரணமடைந்ததைக் கேட்டுத் துயருறுகிறோம் (இன்னா லில்லாஹி வ இன்னா இலய்ஹி ராஜி ஊன்).

இந்தியாவில் இந்நூற்றாண்டின் இணையற்ற இஸ்லாமியப் பிரச்சாரகர்களுள் ஒருவராக மீரட் மவ்லானா விளங்கினார்கள். சிறப்பாக தென் கிழக்கு ஆசியாவிலும், தென்னாப்ரிக்காவிலும் அவர்கள் இஸ்லாமியத் தொண்டு புரிந்திருக்கிறார்கள். பல மொழிகளில் பாண்டித்தியம் பெற்றிருந்த அவர்களின் சொற்பொழிவுகளும், எழுத்துக்களும் பலரை இஸ்லாமின் பால் ஈர்த்திருக்கின்றன.

இப்பெரியாரின் ஆத்மா சாந்தியடைய இறைவனிடம் துஆச் செய்கிறோம்,



# நமக்குள்ளே!

அல்ஹம்துலில்லாஹ்.

ஹஜ் மலருக்கு வாசகர்கள் அளித்த வரவேற்பும், கூறிய வாழ்த்துரைகளும் எங்கள் உள்ளத்தைத் தொட்டன. அதோடு எங்களை இவ்வினிய இஸ்லாமிய இலக்கியப் பணியிலே மேலும் ஊக்குவிக்கும் வகையிலே அமைந்திருந்தன.

64 பக்கங்களில் வெளியிட முடிவு கட்டியிருந்த மணி விளக்கை இஸ்லாமியப் புத்தாண்டு பிறக்கும் இப்புனித மாதத்தின் நினைவாக 72 பக்கங்களில் வெளிக் கொணர்ந்துள்ளோம்.

**கவிதை** எது இன்பம் என்பது பற்றிய அழகிய கவிதை உண்மை இன்பத்தின் மாற்றை நமக்கு உரைத்துக் காட்டுகிறது.

**கதைகள்** சென்ற மாதம் வெளியான "இரத்த பாசம்" என்ற சிறு கதையைத்தொடர்ந்து, "இரத்த தானம்" என்ற தலைப்பில் வேறொரு எழுத்தாளர் அக்குடும்பத்தில் நடந்த ரசமான சம்பவங்களை மேலும் சித்திரிக்கிறார். "இருளும், ஒளியும்" அன்னையின் பாசத்தை அழகுற வர்ணிக்கும் உயரிய சிறு கதை.

**கட்டுரைகள்** இமாமுல் அஃலம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்களின் உன்னத வாழ்வுச் சரிதை இவ்விதழோடு முடிவுறுகிறது. அடுத்த இதழில் சட்ட மேதை இமாம் ஷாபியீ (ரஹ்) அவர்களின் வரலாறு இடம் பெறும்.

ஆங்கிலப் பேராசிரியரான ரா. ஸ்ரீ. தேசிகன் "சமய ஆராய்ச்சி" என்ற தலைப்பில் பொதுவே மதங்களைப்பற்றிய தரமான ஆராய்ச்சிக் கட்டுரைத் தொடரை இவ்விதழில் துவங்குகிறார்.

அல்லாமா இக்பால் (ரஹ்) அவர்களின் இனிய கவிதையின் அடிப்படையிலே அமைந்துள்ள 'உணர்வு கொள்வீர்' என்ற கட்டுரை நல்லுணர்ச்சிகளைத் தூண்டுகிறது.

இறைவனின் அன்புக்கு எல்லைக்கோடே கிடையாது. "என் அருள் என் கோபத்துக்கு முந்துகிறது" என்று ஆண்டவன் தன் முந்தைய வேதங்களில் கூறுவதாக இமாம் கஸ்ஸாலீ (ரஹ்) குறிப்பிட்டிருக்கிறார்கள். நிகரற்ற அவன் அன்பை விளக்குகிறது இம்மாதத்திய திருக் குர்ஆன் தெளிவுரை.

ஹலரத் ஹுஸைன் (ரலி) என்றால் தியாகத்தின் சிகரம் என்று பொருள். உலகின் பல மொழிகளில் இத் தியாகப் பிழம்பின் வீர வரலாறு பொறிக்கப்பட்டிருக்கிறது. இவ்வீரரின் தியாகத்தை நெஞ்சை நெகிழ்விக்கும் முறையிலே எடுத்துக் கூறுகிறது "தியாக நாயகர்."

தலைவர் ஜனாப் முஹம்மது இஸ்மாயில் ஸாஹிபின் பொருள் நிறைந்த சொற்பொழிவோடு இடம் பெற்றுள்ள இம்மாதப் பிரயாணத் தொடர் கட்டுரை பல அரிய கருத்துக்களைப் பொதிந்திருக்கிறது.

பக்கங்களை அதிகப்படுத்தியும் நாங்கள் விரும்பிய விஷயங்களையெல்லாம் இடம் பெறச் செய்ய முடியவில்லை. "சிந்தனையின் சிறப்பு"த் தொடர் அடுத்த மாதம் விரிவாக வரும்.

மதிப்புரையும், கேள்வி - பதிலும் வாசகர்களின் கவனத்தை நல்ல முறையில் கவர்ந்திருப்பது கண்டு களிப்படைகிறோம். வரும் இதழ்களில் இன்னும் பல அம்சங்களைச் சேர்க்க நாட்டங் கொண்டுள்ளோம். நற்றொண்டுகளுக்கு நற்றுணை புரியும் நாயன் நல்லருள் செய்வானாக!




இம்மாத '' மணி விளக்கு '' முகப்பில் நீங்கள் காணுவது தாஜ் மஹல் அல்ல! ஆனுல் அதற்கும் இதற்கும் நெருங்கிய தொடர்புண்டு.

இரண்டும் முகலாய மன்னர்களால் கட்டப்பட்டவை தாம். இரண்டும் பிள்ளைப் பேற்றின்போது உயிர் நீத்த காதல் மனைவிகளின் சமாதிகள் மீது எழுப்பப்பட்ட நினைவு மாளிகைகளே. தாஜ்மஹல் தாய் என்றுல் இக் கட்டிடத்தைச் சேய் எனக் கூறலாம்.

'' தாஜ்மஹலை '' தந்தை கட்டினுர் ; நீங்கள் முகப்பில் காணும் கட்டடத்தைத் தனயன் கட்டினுர்.

என்ன ! அவ்ரங்கஜேப் ஆலம்கீர் பாதுஷாவா இத்தகைய அழகு மாளிகையை எழுப்பி யிருக்கிறுர் எனப் பலர் ஆச்சரியப்படலாம்.

ஆம்! இந் நாட்டு மக்களிடையே வேற்றுமையை விதைக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு 'வின்ஸன்ட் ஸ்மித்' போன்ற ஆங்கிலேயர்களால் எழுதப்பட்ட சரித்திரங்கள் மூலம் அவர்கள் அறிந்து வைத்திருக்கும் அவ்ரங்கஜேப் வேறு, உண்மை அவ்ரங்கஜேப் வேறு.

இந்திய நாட்டு வரலாற்றிலே அவ்ரங்கரைப் போன்ற நீதி வழுவா ஒழுக்க சீலரான மன்னரைக் காண்பதரிது. தவருன சரித்திரம் படித்த மக்களுக்கு நம் கூற்று புதிதாகத் தென்படினும், அண்மைக் காலத்திலே செய்யப்பட்டுள்ள உண்மையான வரலாற்று முடிவுகள் இதற்கு அரண் செய்வதாகவே அமைந்துள்ளன.

தம் மதத்தவரிடத்திலே அவர் அளப்பரும் பற்றுக்கொண்டிருந்தார். அந்தக் காரணத்திற்காகவே அவரை ஹிந்துப் பெருங்குடி மக்களின் மகத்தான விரோதியாக சித்திரித்திருக்கின்றனர், விஷந்தோய்ந்த எழுது கோலால் சரித்திரம் வரைந்த சிலர். ஆனுல் ''பொய் அழிகிறது மெய் பரவுகிறது. ஏனெனில் பொய் அழிந்தே தீரும்.''

இந்திய நாட்டிலே இஸ்லாமியர் இழிந்திருப்பதைக் கண்டு உள்ளம் வெதும்பி அவர்கள் உயர்வுக்காக ஓயாது சிந்தித்த ஒரே ஒரு பெருமன்னர் அவ்ரங்கஜேப்.

மக்களிடையே ஒழுக்க மிக்க வாழ்வு மலர்வதற்காக, ஆணும் பெண்ணும் பொதுச் சபைகளிலே கலந்துறவாடுவதைத் தடுத்து, ஆண் பெண் அணிய வேண்டிய உடைக்கும் வரை முறை வகுத்து, குடியையும் சூதாட்டத்தையும் சட்ட மூலமாகத் தடை செய்து, மக்களிடையே தீமையை விலக்கி நன்மையை ஏவுவதற்காக போதகர்களை நியமித்த சீலர் அவ்ரங்கஜேப்.

அவ்ரங்கர் ஒரு முகலாய மன்னர் என்பதை விட மக்களுக்கு நல்லறிவைப் போதித்த இறைவனின் மெய்யடியார் என்பதே சாலப் பொருந்தும்.

ராஜபுதனத்துக் கடும்பாலை வெளிகளிலே அவர் நடமாடிய போதும், மகாராட்டிர மலைப் பகுதிகளிலே சஞ்சரித்த போதும், டில்லி செங்கோட்டையின் அத்தாணி மண்டபத்திலே வீற்றிருந்த போதும், தகிக்கும் வெயிலடிக்கும் தக்காணப் பகுதியிலே பொறுப்பு வகித்த போதும் அவர் உல்லாச வாழ்வு பற்றி என்றும் நினைத்தவரல்லர். மாருக, அறிஞர் பெரு மக்களுடன் மக்களின் ஒழுக்க உயர்வுபற்றியே என்றும், எப்பொழுதும் விவாதித்தார். கொடுங்கோன்மைக்கு முடிவு கட்டுவதிலும் அவர் தம் நேரத்தில் பெரும் பகுதியைச் செலவிட்டார். ஆட்சிக் கருமங்கள் ஒவ்வொன்றையும் தாமே நேரில் கவனித்து, ஓயாதுழைத்த மன்னர், இறைவனை ஐவேளை வணங்கத் தவறியதே இல்லை. இத்தனைக்கும் இடையே இறையின் மறை திருக் குர் ஆனை எழுதவும் உயர் நூற்களைக் கற்கவும் அவர் நேரங் கண்டார்.

பரபரப்பு மிக்க யுத்தகளத்திலும் சரி, அமைதியும் பெருமிதமும் மிளிரும் தம் அரண்மனையிலும் சரி, அவர் அடக்கமாகவே இருந்தார்.

தம் சரீர இச்சைகளுக்கு என்றும் அடி பணியாத வீரர் அவ்ரங்கஜேப். சூழ்நிலைகள் எவ்வளவோ துரோகமிழைத்துங்கூட என்றும் நிதானமும் நெறியும் தவருமல் வாழ்ந்த நேர்மையாளர் அவர். அவ்ரங்கர் தக்காணத்திலே பணியாற்றிக் கொண்டிருந்தபோது ஆக்ராவிலே ஆட்சி செலுத்தி வந்த ஷாஜஹான் அவ்ரங்கரை வரவழைத்து, பாரசீக அரச குடும்பத்தைச்சார்ந்த ஷாநவாஸ் ஸபவீயின் குமாரி, தில்ராஸ்பானுவை மணமுடித்து வைத்தார். தில்ராஸ் பானு '' ராபியத்துத் தவ்ரானி '' (காலத்தின் விளக்கு) என்ற பெயராலும் அழைக்கப்பட்டார்.

அவ்ரங்கரோடு 20 ஆண்டுகள் வாழ்வு நடத்தி 5 குழந்தைகளை ஈன்றெடுத்த இம்மாதரசி 5-ஆம் குழந்தையைப் பெற்றெடுத்தவுடனேயே இவ்வுலக வாழ்வை முடித்துக்கொண்டார். பொதுவே வரலாற்றேடுகளிலே அவ்ரங்கரும் தில்ராஸ்பானுவும் நடத்திய வாழ்வு பற்றி மிகக் குறைவாகவே குறிப்பிட்டிருந்தாலும் தில்ராஸ்பானுவின் சமாதி மீது தோன்றியுள்ள 'தென்னுட்டுத் தாஜ்மஹல்' எனப் போற்றப்படும் ''பீபிகா மக்பரா'' எளிய வாழ்வு வாழ்ந்த அவ்ரங்கர் தில்ராஸ் மீது எவ்வளவு அன்பு கொண்டிருந்திருக்க வேண்டும் என்பதையே காட்டுகிறது.

ஒரு சாதாரண பணக்காரருக்குரிய ஆடம்பரம்கூட இன்றி, ''குர்ஆன் எழுதியும், குல்லா தைத்தும்'' தம் சொந்தச் செலவு செய்த அவ்ரங்கரா இத்தகைய அழகு மாளிகையை எழுப்பினுர் என்பது ஒரு புதிராகத்தான் இருக்கும்.

சுமார் 15 இலட்சம் ஜனத் தொகையுடன் 17-ஆம் நூற்றுண்டில் கீழ் நாட்டிலேயே மாபெரும் நகராக விளங்கிய அவ்ரங்காபாத், 'தக்காணத்து டெல்லி' எனப் பெயர் பெற்றது. ஏறத்தாழ அரை நூற்றுண்டு காலம் முகலாயப் பேரரசர் அவ்ரங்கஜேபின் ஆட்சித் தலைநகராக விளங்கிய அந்நகருக்கு மேலை நாடுகளிலிருந்தெல்லாம் மருத்துவர்களும் மற்ற கலைஞர்களும் வந்து கொண்டிருந்தனர் என 'மானுக்கி' என்ற இத்தாலிய சரித்திராசிரியர் தெரிவிக்கிறுர். அவ்ரங்காபாதில் இருக்கும் இஸ்லாமிய கலைச் சின்னங்கள் பலவற்றில் தனி அழகுடன் திகழ்வது ''பீபிகா மக்பரா''.

ஒரு லட்சத்து ஐம்பதினுயிரம் சதுர கஜம் விஸ்தீரணத்தில் இம் 'மக்பரா' அமைந்துள்ளது. 72 சதுர அடி விஸ்தீரணத்தில் அமைந்துள்ள ஜெய்பூர் வெண் சலவைக் கல்லாலான மக்பராவைச் சுற்றி நான்கு மூலைகளிலும் 72 அடி உயரமான மனுராக்கள் அலங்கரிக்

கின்றன. தாஜ்மஹலில் பாதி அளவே கொண்ட இவ்வன்பு மாளிகையை எழுப்ப ஏறத்தாழ ஏழு இலட்ச ரூபாய் செலவிடப்பட்டதாக குலாம் முஸ்தபா என்ற சரித்திராசிரியர் தெரிவிக்கிருர்.

முகலாயக் கலை உணர்வுக்கே உரிய வேலைப்பாடமைந்த சலவைக் கல் திரைகளும், தாழ்வாரங்களும், அழகிய கட்டடத்திற்கு அணி செய்வது போன்ற ஓங்கி வளர்ந்த பைன் மரங்களும், ஆக்ராவின் அந்தக் காதற் சின்னத்தையே நம் நினைவுக்குக்கொண்டு வருகின்றன.

தாஜ்மஹலைக் கட்டிய மாபெரும் சிற்பி அஹ்மதின் மைந்தன் அத்தாவுல்லா என்பார் இதைக் கட்டி முடித்தார் என பீபீகாமக்பரா வாயில்களில் ஒன்றில் காணப்படுகிறது.

தாஜ்மஹலின் பெருமையோடு போட்டி போடும் உயர்வு பெற்ற இம்மாளிகை தக்காணத்துச் சின்னங்களிலெல்லாம் தலை சிறந்தது என்பதில் ஐயமில்லை.

உலகம் வியக்கும் அஜந்தாக் குகைகளுக்கு அண்மையிலேயே இருக்கும் இந்த அழகுச் சின்னம், அவ்ரங்கரின் கலை உணர்வை மட்டுமல்ல, கலைக் கொள்கையையும் அறிவுறுத்திக் கொண்டிருக்கிறது.

''தன் பெயர் பூமியில் நினைக்கப்படும் வரையிலே, விண்ணிலே வாழும் ஆத்மா மகிழ்ச்சி அடைகிறது'' என்ற எண்ணத்தின் அடிப்படையில் சூரியனும் சந்திரனும் நிலைத்திருக்கும் காலம் வரை தங்கள் பெயரும் நிலைத்திருக்க மலைகளைக் குடைந்து கலைகளைப் பொறித்தனர், பௌத்த சிற்பிகள்.

இருண்ட மலைக் குகைகளிலே மறைந்திருந்த கலைப் பெருக்கை சரியான ஒளியிலே, வெட்ட வெளியிலே கொண்டு வந்து வாழ்வின் ஒரு பகுதியாக மாற்றினர்கள் முஸ்லிம்கள் என்பதையே, ''பீபீகா மக்பரா'' போன்ற இஸ்லாமிய கலைச் சின்னங்கள் உலகுக்கு அறை கூவிக் கொண்டிருக்கின்றன.

கலையின் பெருமை அதன் பயனில்தானே இருக்கிறது!

அவ்ரங்கர் கொண்டிருந்த இஸ்லாமிய உணர்வுக்கு அவர் செய்த சீர்திருத்தங்களும், சட்டத் துறையிலே இன்றும்கூட பெரும் பயன் அளித்துவரும் ''பதாவாயே ஆலம்கீர்'' என்ற மார்க்கத் தீர்ப்புகளின் தொகுப்பும் ஹிந்து மதத்தின் மீது அவர் கொண்டிருந்த மதிப்பிற்கு, காசி விசுவநாதர் கோயிலுக்கும் தமிழ் நாட்டு முனிவர் குமர குருபரருக்கும் அளித்த மான்யங்களும் எடுத்துக்காட்டாக, இருப்பதைப் போன்றே காதல் மாளிகை எழும்பக் காரணமான மும்தாஜின் மைந்தனும், கவிதா ரஸிகமணி ஜேபுன்னிஸாவின் தந்தையுமான அவ்ரங்கரின் கலையுணர்வுக்குச் சிறந்த சின்னமாக தென்னாட்டுத் தாஜ்மஹல், ''பீபீகா மக்பரா'' விளங்குகிறது.

—அஸத்

இக் கட்டுரைக்கு ஆதாரமான சில நூற்கள்:

1. கேம்பிரிட்ஜ் இந்திய சரித்திரம்-மத்திய கால இந்தியா.
2. அவ்ரங்கஜேப். ஜது நாத் சர்க்கார். முதல் வால்யூம்.
3. அவ்ரங்கஜேபும், அவர் காலமும்: ஸஹீருத்தீன் பாருகி.
4. ''ஸ்டோரியா டி மோகர்'' முகலாயர் வரலாறு - மானுக்கி (இர்வினின் ஆங்கில மொழி பெயர்ப்பு)
5. ஹைதராபாத் புதை பொருள் இலாகா வெளியீடுகள் வால்யூம் 2, 16, 31.
6. தக்காண் சரித்திர மாநாட்டு நிகழ்ச்சிகள் (1945) பேராசிரியர் அப்துல் வஹ்ஹாப் புகாரி; குலாம் அஹ்மதுகான் ஆகியோரின் கட்டுரைகள்.




மு. முஹம்மது ஹஸன்

# அன்பும் அருளும்

இறைவன் அருளின் எல்லையற்ற தன்மை பற்றியும் அவனது மன்னிப்பின் அளவற்ற பான்மை பற்றியும் இறையருள் இலக்கியமாம் குர் ஆன் எண்ணற்ற இடங்களில் அழகு படக் கூறுகிறது.

"(நபியே) நீர் கூறும்: எனதடியார்களே! (உங்களில்) எவரும் வரம்பு மீறி தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்ட போதிலும், அல்லாஹ்வின் அருளைப்பற்றி நீங்கள் நம்பிக்கை யிழந்துவிட வேண்டாம். (நீங்கள் பாவத்திலிருந்து விலகி மனம் வருந்தி மன்னிப்பைக் கோரினல்) நிச்சயமாக அல்லாஹ் (உங்களுடைய) பாவங்கள் யாவையும் மன்னித்துவிடுவான். ஏனென்ருல் நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்போனும் பேரன்புடையோனுமாக இருக்கிருன்" (39-53)

இறைவனின் சிருஷ்டியான இயற்கையின் அம்சங்கள் ஒவ்வொன்றிலும் இறைவனின் அன்பு பிரதிபலிப்பதைக் காண்கிரேம். ஆகவே, படைத்தவனுக்கும் படைக்கப்பட்டவை யாவற்றிற்கும் இடையே உள்ள உறவு அன்பை அடிப்படையாகக் கொண்டது. மனிதன் இறைவனுக்குச் செலுத்தும் வணக்கமும் தூய கலப்பற்ற அன்பைக் கொண்டதாக அமைதல் வேண்டும்.

இறைவன் மீது அன்பு செலுத்த விரும்பும் மனிதன் அவனுடைய படைப்புகள் மீதும் அன்பு செலுத்தத் தெரிந்து கொள்ளவேண்டும். "தம் பொருளை இறைவனின் வழியில் செலவு செய்பவரும்," "இறைவன் பால் கொண்ட அன்பினுல் ஏழைகளுக்கும், அநாதைகளுக்கும், சிறைப் பட்டோருக்கும் உணவு அளித்து (வந்தனர்.) "நாங்கள் உங்களுக்கு உணவளிப்பதெல்லாம் இறைவனுக்காகவே அன்றி உங்களிடம் பிரதி பயனையோ, நன்றியையோ (பெற) விரும்பி யல்ல." (என்று கூறுபவர்) ஆவார்கள். (76:8-9)

துன்புற்றோர் பிணியுற்றோர் பசியால் மெலிவுற்றோர் இவர்களுக்குச் செய்யும் சேவை இறைவனுக்குச் செய்யும் சேவையாகும் என்ற கருத்தை வலியுறுத்தும் ஹதீதுகளும் உள்ளன. தீர ஆராய்ந்து பார்த்தால் இஸ்லாமிய சட்டதிட்டங்களில் காணப்படும் ஒவ்வொரு ஏவலும், விலக்கலும் இந்த தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருப்பதைக் காணலாம்.

இறைவனுடைய இயல்புகளில் மிகச் சிறப்புடையது "ரஹ்மத்" எனும் அருள் தன்மை, அல்லது அன்பு. இது பற்றி குர் ஆனில் 300-க்கு மேற்பட்ட இடங்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அன்றியும் ரஹ்மத் என்னும் பொருள் தரும் வார்த்தைகள் எண்ணற்ற இடங்களில் வருவதைக் காணும் போது குர் ஆன் ஷரீப், முழுக்க

முழுக்க அன்பின் போதனையாகவே அமைந்திருப்பது விளங்கும்.

உலகத்தைச் சீர்திருத்தி, உயரிய வாழ்வு வாழச் செய்ய வந்த உத்தம நபி முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்கள் மதத் தலைவராக, படைத் தலைவராக, நிர்வாகத் தலைவராக, நீதி பரிபாலகராக, நேர்மையுள்ள ஆட்சியாளராகப் பணி புரிந்தார்கள். இந்த எல்லாப் பதவிகளிலும் அவர்கள் அன்பு வழி நின்று அருஞ் செயலாற்றியதை வரலாறுகள் விளக்கிக் கூறுகின்றன. அடிமைகள் மீதும், அனாதைகள் மீதும் அருள்பொழிந்து அன்பு சொரிந்து, வாழ்ந்தார்கள்; ஏழை எளியவர்களுக்குக் கருணைக் கடலாகத் திகழ்ந்தார்கள் என்றும் சரித்திரங்கள் கூறுகின்றன. இஸ்லாத்தின் அடிப்படை அன்பு என்பதற்கு ஓர் எழில் மிகு எடுத்துக்காட்டாகவே அவர்களின் தூய வாழ்வு அமைந்திருந்தது. அதனால் தான் இறைவனும் திருமறையில் "(நபியே)! உம்மை நாம் உலகங்களுக்கெல்லாம் ஓர் அருள் கொடையாகவே யன்றி நாம் அனுப்பவில்லை (21: 107) என்று சொல்லி, தன் திருத்தூதரை ஓர் அன்புப் பொழிலாக, அருள் ஊற்றாகப் பெருமைப் படுத்தி இருக்கின்றான்.

இஸ்லாத்தின் உண்மைத் தத்துவத்தை நபிகள் நாயகம் (ஸல்) தங்கள் ஒவ்வொரு சொல்லிலும், செயலினாலும் காட்டி இருக்கிறார்கள். இணையற்ற ஏக நாயக வணக்கமும், அவனடியார் பால் அன்பு ஆதரவு காட்டுதலுமே அத் தத்துவத்தின் சாராம்சம். எவனொருவன் அவனடியார்களிடம் அன்பு காட்டுகிறானோ அவனிடம்தான் ஆண்டவன் அன்பு காட்டுகிறான் என பெருமானார் மொழிந்திருக்கிறார்கள்.

இஸ்லாம் வற்புறுத்தும் இந்த அன்பு மனிதர்களிடம் மட்டுமின்றி 'வாயில்லாப் பிராணி'களிடமும் காட்டப்பட வேண்டியதாகும். அற்பப் பறவையிடம் காட்டும் அன்புக்காகக்கூட, இறுதி நாளில் இறைவன் நற்கூலி தருவான் என்னும் ஒரு நாயக வாக்கியம் உண்டு.

இறைவன் திருமறையில் (32-9) தன் 'ரூஹை' மனிதனில் புகுத்தியதாகக் கூறுவதால் மனிதனிடத்தும் இறைவனுக்குச் சிறப்பான அன்பு, அருள், மன்னிப்பு என்னும் இயல்புகள் இருத்தல் வேண்டும். இதைப் பின் வரும் குர் ஆன் வசனம் வலியுறுத்திக் கூறுகிறது:

"அவர்கள் (எத்தகையோரென்றால்) செல்வ நிலைமையிலும், தரித்திர நிலைமையிலும், தானம் செய்து கொண்டே யிருப்பார்கள்; கோபத்தை விழுங்கி விடுவார்கள்; மனிதர் (களின் குற்றங்)களை மன்னித்து விடுவார்கள். அல்லாஹ் (இத்தகைய) நல்லோரை நேசிக்கின்றான்." (3-134)

★

*அப்பாஸிய கலீபா அல்மஃமூன், இப்ராஹீம் இப்னில் மஹ்தியின் மீது வெற்றி கொண்ட பொழுது தோற்றவரை என்ன செய்ய வேண்டும் என்று தம்முடைய அமைச்சரான அஹமது இப்னு அதீகாலீ அல் அஹ்வலி (மாறு கண் அமைச்சர்)டம் கேட்டார். அமைச்சர் கூறினார். ''யா அமீரல் மூமினீன், நீங்கள் அவர் குற்றத்திற்காக அவரைக் கொலை செய்தால் உங்களைப் போன்று தண்டனையளித்த பல மன்னர்களுடன் ஒன்றாகக் கருதப்படுவீர்கள்.*

*''ஆனால், அவரை மன்னித்துவிட்டால் உங்களுக்கு ஒப்புவமையே இல்லையென்று உலகம் பெருமை படுத்தும்.''*

**இப்னு கல்லிகான். வபயாதுர் அயான்**
**(மஜானியுல் அதபி)**

தமிழாக்கம்
"துராப்"



# அறிவுக் களஞ்சியம் அபூஹனீபா (ரஹ்)

"எம். ஏ."

## அடுத்தாரைக் காத்து வந்த அண்ணலார்

அண்டை அயலார்மீது அபூஹனீபா (ரஹ்) அவர்கள் காட்டிய அன்பு அளவிடற்கரியது. பணத்தின் துணையோ, பலத்தின் துணையோ இல்லா சாதாரண மக்களிடத்து அவர்கள் காட்டிய பரிவு சரித்திரத்திலே சிறந்து விளங்குகிறது. அறிவுக் களஞ்சியமான அப்பெரியார் அன்பின் கருவூலமாகவும் அமைந்தார்கள் என்பதை, அவர்கள் வாழ்வில் நிகழ்ந்த பல சம்பவங்கள் தெளிவாக்குகின்றன.

இமாம் அவர்களின் அடுத்த வீட்டில், செருப்புத் தைக்கும் ஒருவர் வாழ்ந்திருந்தார். பகலெல்லாம் அவர் வேலை செய்வார். கிடைக்கும் பணத்தைக்கொண்டு கள்ளும் இறைச்சியும் வாங்கிக் கொண்டு வந்து இரவு முழுவதும் தின்று, குடித்து, பாடிக்கொண்டிருப்பார். "போர் முனையில் பொருதும் திறம் பெற்ற என்னை இம்மக்கள் இழந்து, மறந்து விட்டனர்'' என்ற ஒரு பாட்டைத் திருப்பித் திருப்பிப் பாடுவார். இமாம் அவர்களோ இரவில் மிகக் குறைவாகத் தூங்குபவர்கள். மற்ற நேரங்களில் தொழுகையிலும் வணக்கத்திலும் ஈடுபட்டிருப்பார்கள். அவற்றிற்கெல்லாம் இச்செம்மானுடைய செயல் இடைஞ்சலாக இருந்தாலும் பொறுத்துக் கொள்வார்கள்.

ஒரு நாள் செம்மான் மிகுதியாகக் குடித்து விட்டுக் கூத்தும் கும்மாளமு மடித்துக் கலகம் விளைவித்து விட்டார். இதைக் கேள்வியுற்ற ஊர்ச் சேவகர்கள் அவரைப் பிடித்துக்கொண்டு போய்ச் சிறையில் தள்ளிவிட்டனர்.

இரவிலே செம்மானின் குரல் கேட்கவில்லையே என்று செம்மானின் செய்தியறியாத இமாம் அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். காலையில் மத்ரஸாவுக்கு வந்ததும் தம் மாணவர்களிடம் இது பற்றிக் கூறினார்கள். செம்மான் கைதியான விஷயத்தை அன்று காலை தெரிய வந்த மாணவர்கள் இமாம் அவர்களிடம் செய்தியை அறிவித்தனர். "அவர் ஏழையாயிற்றே; என் அண்டை வீட்டுக்காரருக்கு யார் துணை செய்யப் போகிறார்கள்?'' என்று கிலேசமுற்ற அபூஹனீபா (ரஹ்) உடனே தங்கள் வாகனத்தைத் தயார் செய்ய உத்

முழுக்க அன்பின் போதனையாகவே அமைந்திருப்பது விளங்கும்.

உலகத்தைச் சீர்திருத்தி, உயரிய வாழ்வு வாழச் செய்ய வந்த உத்தம நபி முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்கள் மதத் தலைவராக, படைத் தலைவராக, நிர்வாகத் தலைவராக, நீதி பரிபாலகராக, நேர்மையுள்ள ஆட்சியாளராகப் பணி புரிந்தார்கள். இந்த எல்லாப் பதவிகளிலும் அவர்கள் அன்பு வழி நின்று அருஞ் செயலாற்றியதை வரலாறுகள் விளக்கிக் கூறுகின்றன. அடிமைகள் மீதும், அனாதைகள் மீதும் அருள்பொழிந்து அன்பு சொரிந்து, வாழ்ந்தார்கள்; ஏழை எளியவர்களுக்குக் கருணைக் கடலாகத் திகழ்ந்தார்கள் என்றும் சரித்திரங்கள் கூறுகின்றன. இஸ்லாத்தின் அடிப்படை அன்பு என்பதற்கு ஓர் எழில் மிகு எடுத்துக்காட்டாகவே அவர்களின் தூய வாழ்வு அமைந்திருந்தது. அதனால் தான் இறைவனும் திருமறையில் "(நபியே)! உம்மை நாம் உலகங்களுக்கெல்லாம் ஓர் அருள் கொடையாகவே யன்றி நாம் அனுப்பவில்லை (21: 107) என்று சொல்லி, தன் திருத்தூதரை ஓர் அன்புப் பொழிலாக, அருள் ஊற்றாகப் பெருமைப் படுத்தி இருக்கின்றான்.

இஸ்லாத்தின் உண்மைத் தத்துவத்தை நபிகள் நாயகம் (ஸல்) தங்கள் ஒவ்வொரு சொல்லினாலும், செயலினாலும் காட்டி இருக்கிறார்கள். இணையற்ற ஏக நாயக வணக்கமும், அவனடியார் பால் அன்பு ஆதரவு காட்டுதலுமே அத் தத்துவத்தின் சாராம்சம். எவனொருவன் அவனடியார்களிடம் அன்பு காட்டுகிறானோ அவனிடம்தான் ஆண்டவன் அன்பு காட்டுகிறான் என பெருமானார் மொழிந்திருக்கிறார்கள்.

இஸ்லாம் வற்புறுத்தும் இந்த அன்பு மனிதர்களிடம் மட்டுமின்றி 'வாயில்லாப் பிராணி'களிடமும் காட்டப்பட வேண்டியதாகும். அற்பப் பறவையிடம் காட்டும் அன்புக்காகக்கூட, இறுதி நாளில் இறைவன் நற்கூலி தருவான் என்னும் ஒரு நாயக வாக்கியம் உண்டு.

இறைவன் திருமறையில் (32-9) தன் 'ரூஹை' மனிதனில் புகுத்தியதாகக் கூறுவதால் மனிதனிடத்தும் இறைவனுக்குச் சிறப்பான அன்பு, அருள், மன்னிப்பு என்னும் இயல்புகள் இருத்தல் வேண்டும். இதைப் பின் வரும் குர் ஆன் வசனம் வலியுறுத்திக் கூறுகிறது:

"அவர்கள் (எத்தகையோரென்றால்) செல்வ நிலைமையிலும், தரித்திர நிலைமையிலும், தானம் செய்து கொண்டேயிருப்பார்கள்; கோபத்தை விழுங்கி விடுவார்கள்; மனிதர் (களின் குற்றங்)களை மன்னித்து விடுவார்கள். அல்லாஹ் (இத்தகைய) நல்லோரை நேசிக்கின்றான்." (3-134)

★

அப்பாஸிய கலீபா அல்மஃமூன், இப்ராஹீம் இப்னில் மஹ்தியின் மீது வெற்றி கொண்ட பொழுது தோற்றவரை என்ன செய்ய வேண்டும் என்று தம்முடைய அமைச்சரான அஹம திப்னு அதீகாலீ அல் அஹ்வலி (மாறு கண் அமைச்சர்)டம் கேட்டார். அமைச்சர் கூறினார். ''யா அமீரல் மூமினீன், நீங்கள் அவர் குற்றத்திற்காக அவரைக் கொலை செய்தால் உங்களைப் போன்று தண்டனையளித்த பல மன்னர்களுடன் ஒன்றாகக் கருதப்படுவீர்கள்.

''ஆனால், அவரை மன்னித்துவிட்டால் உங்களுக்கு ஒப்புவமையே இல்லையென்று உலகம் பெருமை படுத்தும்.''

**இப்னு கல்லிகான். வபயாதுர் அயான்**
**(மஜானியுல் அதபி)**

தமிழாக்கம்
"துராப்"



# அறிவுக் களஞ்சியம் அபூஹனீபா (ரஹ்)

"எம். ஏ."

## அடுத்தாரைக் காத்து வந்த அண்ணலார்

அண்டை அயலார்மீது அபூஹனீபா (ரஹ்) அவர்கள் காட்டிய அன்பு அளவிடற்கரியது. பணத்தின் துணையோ, பலத்தின் துணையோ இல்லா சாதாரண மக்களிடத்து அவர்கள் காட்டிய பரிவு சரித்திரத்திலே சிறந்து விளங்குகிறது. அறிவுக் களஞ்சியமான அப்பெரியார் அன்பின் கருவூலமாகவும் அமைந்தார்கள் என்பதை, அவர்கள் வாழ்வில் நிகழ்ந்த பல சம்பவங்கள் தெளிவாக்குகின்றன.

இமாம் அவர்களின் அடுத்த வீட்டில், செருப்புத் தைக்கும் ஒருவர் வாழ்ந்திருந்தார். பகலெல்லாம் அவர் வேலை செய்வார். கிடைக்கும் பணத்தைக்கொண்டு கள்ளும் இறைச்சியும் வாங்கிக் கொண்டு வந்து இரவு முழுவதும் தின்று, குடித்து, பாடிக்கொண்டிருப்பார். "போர் முனையில் பொருதும் திறம் பெற்ற என்னை இம்மக்கள் இழந்து, மறந்து விட்டனர்'' என்ற ஒரு பாட்டைத் திருப்பித் திருப்பிப் பாடுவார். இமாம் அவர்களோ இரவில் மிகக் குறைவாகத் தூங்குபவர்கள். மற்ற நேரங்களில் தொழுகையிலும் வணக்கத்திலும் ஈடுபட்டிருப்பார்கள். அவற்றிற்கெல்லாம் இச்செம்மானுடைய செயல் இடைஞ்சலாக இருந்தாலும் பொறுத்துக் கொள்வார்கள்.

ஒரு நாள் செம்மான் மிகுதியாகக் குடித்து விட்டுக் கூத்தும் கும்மாளமு மடித்துக் கலகம் விளைவித்து விட்டார். இதைக் கேள்வியுற்ற ஊர்ச் சேவகர்கள் அவரைப் பிடித்துக்கொண்டு போய்ச் சிறையில் தள்ளிவிட்டனர்.

இரவிலே செம்மானின் குரல் கேட்கவில்லையே என்று செம்மானின் செய்தியறியாத இமாம் அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். காலையில் மத்ரஸாவுக்கு வந்ததும் தம் மாணவர்களிடம் இது பற்றிக் கூறினார்கள். செம்மான் கைதியான விஷயத்தை அன்று காலை தெரிய வந்த மாணவர்கள் இமாம் அவர்களிடம் செய்தியை அறிவித்தனர். "அவர் ஏழையாயிற்றே; என் அண்டை வீட்டுக்காரருக்கு யார் துணை செய்யப் போகிறார்கள்?'' என்று கிலேசமுற்ற அபூஹனீபா (ரஹ்) உடனே தங்கள் வாகனத்தைத் தயார் செய்ய உத்

தரவிட்டார்கள்.

அப்பாஸிய கலீபா மன்ஸூர் ரின் ஆட்சிக் காலமது. அவருடைய ஒன்று விட்ட சகோதரரான ஈஸா இப்னு மூஸா கூபா பிராந்தியத்தின் தலைமை அதிகாரியாக இருந்தார். இமாம் அவர்கள் தம் தர்பாருக்கு வருகிறார்கள் என்ற செய்தி அறிந்ததும், அவர்களை மரியாதையுடன், ஆட்சி மண்டபத்திற்கே வாகனத்துடன் அழைத்து வருமாறு தம் சேவகர்களுக்குப் பணித்தார். விலையுயர்ந்த கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்த அரச மண்டபத்திலா வாகனத்துடன் அபூ ஹனீபாவை அழைத்து வருவது என்று ஆச்சரியத்தால் அயர்ந்து நின்றனர் சேவகர். "ஆம்! என் கம்பளங்களும், என் மாளிகையும் அதனால் பாக்கியம் பெறட்டும்" என்று விளக்கிக் கூறினார் அறிவின் நிறை அறிந்த அந்த ஆட்சியாளர்.

இமாம் அவர்கள் அரச மண்டபத்தை அடைந்ததும் ஓடோடி வந்து கை கொடுத்து இமாம் அவர்களை வரவேற்று, "என்ன வேலையாக இவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டு என்னைத் தேடி வந்தீர்கள்? எனக்கு உத்தரவு கொடுத்திருந்தீர்களானால், உங்கள் சமுகத்தில் நான் ஆஜராகியிருப்பேனே!" என்று பணிந்து உபசரித்தார்.

"என் அண்டை வீட்டுக்காரர் கைது செய்யப்பட்டுச் சிறையில் இருக்கிறார். அவர் ஏழை. பிழை பொறுத்து அவரை விடுவிக்க உத்தரவு செய்ய வேண்டும்" என்று இமாமுல் அஃலம் கோரினார்கள்.

"இமாம் அவர்கள் என்னைத் தேடி வந்து, கௌரவித்ததன் நினைவாக அந்தச் செம்மானையும், அவரோடும், அவருக்குப் பின்னரும் கைதான எல்லோரையும் விடுதலை செய்யுங்கள்" என்று உத்தரவிட்டார் ஈஸா.

சுதந்திர மனிதனாக வெளியில் வந்த செம்மானைப் பார்த்து, "நான் உம்மை மறக்கவில்லையல்லவா?" என்று வினவினார்கள் அபூ ஹனீபா. உலகம் தன்னை இழந்து மறந்து விட்டது என்று பாடி இரவைக் கழித்த செம்மானுக்குத் தன் செயலின் நினைவு வந்தது. இமாம் அவர்களின் இரு கரங்களையும் பிடித்துக் கொண்டு "என்னை மனிதனாக்கினீர்கள். நான் என் கெட்ட பழக்கங்களை மறந்து விட்டேன்" என்று உறுதி கூறி, இமாம் அவர்களின் மாணவ குழாத்திலே சேர்ந்து விட்டார்.

இமாமுல் அஃலம் அவர்களின் அண்டை வீட்டில் ஒரு யூதர் இருந்தார். அவர் வீட்டிலிருந்து கொட்டப்படும் தண்ணீரெல்லாம் இமாம் அவர்களுடைய வீட்டின் முன்பு தேங்கி, சேறும் சகதியுமாகிவிடும். ஒவ்வோர் இரவும் அபூ ஹனீபா (ரஹ்) ஒரு பாத்திரத்தை எடுத்துக் கொண்டு போய், அந்த யூதரின் வீட்டிலிருந்து தண்ணீர் நிரம்பும் பொழுதே, அதை அப்புறப்படுத்துவார்கள். ஒரு தடவை இமாம் அவர்கள் கழிவு தண்ணீர் கொட்டுவதைக் கண்ட அந்த யூதர், "நீர் ஒரு வேலைக்காரனை வைத்து, அவனுக்குச் சம்பளம் கொடுக்காது, பணம் மேலும் சேர்க்கும் கஞ்சத்தனமான நோக்கோடு தானே இதை நீரே செய்கிறீர்?" என்று கேட்டார்.

"நீர் இந்தக் கேள்வியைக் கேட்டிரா விட்டால், நான் இதைப் பற்றிப் பேசியிருக்கவே மாட்டேன். இந்தக் கழிவு நீர் எங்கிருந்து வருகிறதென்று நீரே பாரும்" என்று அழைத்துக் கொண்டுபோய் அவர் வீட்டிலிருந்து கழிவு நீர் சேர்வதைக் காண்பித்தார்கள்.

தன் வீட்டுக் கழிவு நீரைத் தான் இமாம் அவர்கள் தங்கள் திருக்கரங்களால் அள்ளியெடுத்துக் கொண்டு போய்ச் சுத்தப்படுத்துகிறார்களென்று அறிந்த யூதர் மிக வேதனையடைந்தார்.

"வீணாக நீர் உம்மை நொந்து கொள்ள வேண்டாம். என் அண்டை வீட்டுக்காரராகிய உமக்கு, நான் இப்படி ஒரு சேவையாவது செய்ய முடிந்ததில், திருப்தியடைகிறேன்" என்று வள்ளல் இமாம் ஆறுதல் கூறினார்கள்.

இன்னா செய்தாரை ஒறுத்து அவர் நாண நன்னயமும் செய்து விடும், நல்லறிவாளரின் பெருமையை, சீலத்தை உணர்ந்த அந்த யூதர் இவ்வுயர் பண்புகளுக்கு ஊற்றாக இருந்த இஸ்லாமிய நெறியை அன்று முதல் ஏற்றுக் கொண்டார்.

## பேரறிவுர், பேச்சும்

நா காத்தல் சோ காக்கும். அதாவது நாவைக் காத்தல் சோகத்திலிருந்து காத்தல் என்று சொல்வதுண்டு. அதிகமாகப் பேசுவது தான் துன்பத்திற்கு வழி கோலுகிறது என்பதற்கொப்பாக இமாம் அவர்கள் மிகக் குறைவாகவே பேசுவார்கள். ஏதாவது விவாதம் துவங்கினால், எல்லோருடைய பேச்சையும் பொறுமையுடன் கேட்பார்கள். இறுதியில் தங்கள் கருத்தை விளக்குவார்கள். அவர்களுடைய மாணவர்களின் கருத்துக்கள், அவர்களுடைய கருத்துக்களுக்கு மாறுபட்டு, முரண்பட்டிருந்தாலும், கடிந்துரையாது அவைகளையும் செவியேற்று பதில்கொடுப்பார்கள்.

அவர்கள் ஆத்திரப்பட்டுப் பேசியதேயில்லை என்று வரலாற்றாசிரியர் எல்லோரும் கூறுகிறார்கள். "யாரையும் இமாம் அவர்கள் இழித்துப் பழித்துப் பேசியதைக் கேட்டதேயில்லை" என்று லஃப் யானுத் தவ்ரீ (ரஹ்) அவர்களிடம் சொல்லப்பட்டபொழுது, "ஆழிய அறிவு படைத்த அபூ ஹனீபா (ரஹ்) தங்கள் நற்செய்கைகளை வேரோடு அழிக்கும் வேலை செய்வார்களா" என்று அன்னார் மறுமொழி கூறினார்களாம்.

"எந்தச் சந்தர்ப்பத்திலும் நான் சத்தியம் செய்யமாட்டேன்; அப்படிச் செய்தால் ஒரு திர்ஹம் (வெள்ளிக் காசு) எனக்கே அபராதம் விதித்துக் கொள்வேன்" என்று தீர்மானித்திருந்தார்கள். ஒரு தடவை பேச்சு வாக்கில் 'சத்தியமாக' என்று சொல்லிவிட்டார்கள். வெள்ளிக் காசு அபராதமாக இருக்கவே தான் இத்தவறிழைக்க நேர்ந்தது. இனி இம்மாதிரித் தப்புச் செய்தால் ஒரு தீனார் (பொற் காசு) அபராதம் செலுத்துவேன்" என்று

முடிவு கட்டிக் கொண்டார்களாம்!

**வணக்க வாழ்வு**

கடமைக்கு என்று தொழாமல், இமாமுல் அஃலம் ஈடுபாட்டோடு, இரவெல்லாம் விழித்திருந்து தொழுதார்கள். எவ்வளவோ நாட்கள் இரவு இஷாத் தொழுகைக்குச் செய்த ஒலுவோடு இரவெல்லாம் தொழுது, ஸுப்ஹூ—அதிகாலைத் தொழுகையையும் அதே ஒலுவோடு நிறைவேற்றுவார்கள். இவ்வாறு தொழுவதைப் பழக்கமாக்கிக்கொண்ட காரணத்தால் மண்டியிட்டு மண்டியிட்டு அவர்களின் முழங்கால்கள் ஒட்டகத்தின் முழந்தாள்களைப் போல் காய்த்திருந்தனவாம்.

ஒரு ரக் அத்திலேயே குர்ஆன் ஷரீபை முழுவதும் ஓதியிருக்கிறார்கள். ஒரு தடவை ஒரு செல்வந்தனுக்கு மிகவும் மரியாதை செய்தார்கள். பின்னர் சிந்தித்துப் பார்த்ததில் அவன் செல்வமே தம்மை அவனுக்கு மரியாதை செய்யத் தூண்டியதாகக் கண்டார்கள். "குற்றமிழைத்து விட்டேன். இது நீங்க நான் ஆயிரம் தடவை திருமறையை ஓதுவேன்" என்று தமக்கே தீர்ப்புக் கூறி, அவ்வாறே ஆயிரம் தடவை திருவேதம் முழுவதையும் ஓதி முடித்தார்கள்.

எப்பொழுதாவது மார்க்கத் தீர்ப்புக் காணுவதில் பிழை செய்து விட்டால், அதற்குப் பரிகாரமாக நாற்பது தடவை திருக்குர்ஆனைப் பூராவாக ஓதி முடிப்பார்கள். இமாம் (ரஹ்) அவர்கள் வாழ் நாள் முழுவதிலும் மொத்தம் ஏழாயிரம் தடவைக்கு மேல் திருக் குர்ஆனை ஓதி முடித்ததாகச் சொல்லப்படுகிறது!

**சொல்லின் திறத்தாலே......**

சொல்லின் திறத்தாலே உலகைச் சோபிக்கச் செய்த சோதி இமாம், அபூ ஹனீபா (ரஹ்) அவர்கள் சொல்லிலே கருத்தும், கவர்ச்சியும் ஒருங்கே அமையப் பெற்றிருந்தன. அதிலும் கேள்வி கேட்பவர்களுக்கு அவர்கள் பதில் சொல்லும் முறையே தனி அழகு வாய்ந்தது.

இமாம் அவர்களின் காலத்திலும் 'நாத்தழும்பேற நாத்திகம் பேசுவோர்' இருந்தனர். அவர்களில் பலர் அபூ ஹனீபா (ரஹ்) அவர்களிடம் வந்து சர்ச்சை செய்வார்கள். ஒரு சமயம் இக் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவர் வந்து, "ஆண்டவன், ஆண்டவன் என்று சொல்கிறீர்களே! அவன் எங்கு நோக்கிக் கொண்டு இருக்கிறான்?" என்ற கேள்வியைப் போட்டார். "விளக்கேற்றி வைத்தால், அதன் சுடர் எத்திசையை நோக்கிக் கொண்டிருக்கிறது?" என்று கேட்டார்கள் இமாமுல் அஃலம்.

"விளக்கின் சுடர் எந்தப் பக்கத்தை நோக்குகிறது என்று எவ்வாறு சொல்ல முடியும்? எல்லாப் பக்கத்தையும் நோக்கியே தான் அது இருக்கும்" எனப் பதில் கொடுத்தார் அவர்.

"நாம் ஏற்றிவைக்கும் விளக்கின் ஒளியே எந்தத் திசையை நோக்கி நிற்கிறது என்று நாம் கூற முடியாத நிலையிலிருக்கும் பொழுது, எல்லாப் பொருள்களுக்கும் உள்ளொளியான இறைவன் எத்திசையை நோக்கி இருக்கிறான் என ஆராய முயல்வது அறிவுடைமையா? என்று திருப்பிக் கேட்டார்கள்.

பிறிதொரு தடவை தஹ்ரிய்யாக்கள் என்னும் இந்நாத்திக வாதிகள் இமாமுல் அஃலம் அவர்களிடம் வந்து சர்ச்சை செய்ய வாரம்பித்தனர்.

தஹ்ரிய்யாக்கள்: அல்லாஹுத் தஆலா ஒருவனிருக்கிறான் என்கிறீர்களே, அவன் இருக்கும் இடமெங்கே?

அபூ ஹனீபா (ரஹ்): அவனுக்கு எந்த இடமுமில்லை.

தஹ்: ஒரு பொருளிருந்தால் அதற்கு ஓர் இடமில்லாமல் இருக்குமா?

அபூ: அதற்கு உம் உடலிலேயே ஓர் எடுத்துக்காட்டிருக்கிறதே!

"என் உடலிலா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் அந்தத் தஹ்ரிய்யா.

அபூ: ஆம்! உம் உடலில் ரூஹு, ஆத்மா, உயிர் என்று சொல்லப்படும் ஒன்றிருக்கிறதல்லவா?

தஹ்: ஆம்.

அபூ: 'அந்த ரூஹு எந்த இடத்திலிருக்கிறது?' தஹ்ரிய்யாவிடம் இருந்து பதில் ஒன்றும் வரவில்லை.

அபூ: அது போகட்டும். பாலிலிருந்துதானே நெய் எடுக்கிறோம். பாலின் எந்த இடத்திலிருந்து நெய் வருகிறது?

இதற்கும் தஹ்ரிய்யா பதில் தரவில்லை.

"உம் உடலிலே உயிர் இருக்கும் இடமும், பாலிலே நெய் இருக்கும் இடமும் காண முடியாத நீர், ஆண்டவனிருக்கும் இடத்தைப்பற்றி ஆராய முற்பட்டது சரியா?" என்று இமாம் அவர்கள் கேட்டதும் தஹ்ரிய்யா வாயடைத்துப் போனார்.

இமாம் அவர்கள் காலத்தில் காரிஜீகள் எனும் கூட்டத்தினரும் இருந்தனர். அவர்கள் மதத் துறையிலே தீவிரவாதிகள். பாவங்கள் செய்யும் எவரும் உடனே 'காபிர்' (இறையை நிராகரிப்போர்) ஆகிவிட்டதாகவே தீர்ப்பளித்துவிடுவார்கள். தங்கள் கொள்கைகளை எதிர்ப்பவர்கள் எல்லோரையும் "முஷ்ரிக்" (இறைவனுக்கு இணை வைத்து வணங்குவோர்) என்றும் பறைசாற்றி விடுவார்கள். ஹலரத் அலீ (ரலி) அவர்களுக்கும், அமீர் முஆவியா அவர்களுக்குமிடையே நடந்த போரில் ஹலரத் அலீ (ரலி) தொடர்ந்து சண்டை செய்யாது, மத்தியஸ்தத்திற்கென மூன்றாவது ஒரு நபரை ஏற்றுக் கொண்டது மாபெரும் தப்பு. அது தான் இஸ்லாமிய உலகிலே பிளவு ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தது என்றும் அவர்கள் வாதிடுவார்கள்.

ஒரு தடவை இக்காரிஜீகளின் தலைவரான லஹ்ஹாக் என்பார் இமாம் அவர்களின் வீட்டில் திடீரெனத் தோன்றினார். உடைவாளை உருவிக்கொண்டே, "நீர் தவ்பாச் செய்து கொள்ளும், இவ்வாள் உம் உயிரைக் குடிக்கப் போகிறது" என்று ஆர்ப்பரித்தார்.

"எதற்காக?" என்று அமைதியாகக் கேட்டார்கள் அபூ ஹனீபா (ரஹ்).

"ஹலரத் அலீ, முஆவியாவுடன் போரிட்ட பொழுது மூன்ருவது ஒரு மனிதரை மத்தியஸ்தராக ஏற்றுக் கொண்டது மிகவும் தவறு என்று நாங்கள் கூறி வருகிருேம். ஆனல் நீரோ அது சரியென்று கூறிவருகிறீர். அலீ தம் கட்சி உண்மையானதென்று எண்ணினுல் மத்தியஸ்தத்திற்கு ஏன் போக வேண்டும்?" என்று வாதிட்டார் அந்த காரிஜீ தலைவர்.

"சரி; இதற்காக நீர் என்னைக் கோன்று என்ன பயன்? நீர் நியாயம் வழங்கும் முறையிலே என்னைக் கொலை செய்துவிட்டால் உம்மீது பாவமில்லை. ஆனல், உம் கருத்திலே பிழையிருந்து, தவருக என்னைக் கொன்றீராஞல் உம் மீது பெரும் பழி சாருமல்லவா?" என்ருர்கள் அபூ ஹனீபா (ரஹ்).

லஹ்ஹாக் யோசனையிலாழ்ந்திருந்தார். மீண்டும் அபூ ஹனீபா கூறினுர்கள்:

"ஆகவே இதைப் பற்றி விளக்கமாகப் பேச எனக்குச் சந்தர்ப்பமளியும். பிறகு பார்த்துக் கோள்வோம்."

"நானும் இதுபற்றி விவாதிக்கத் தயாராகவே இருக்கிறேன்" என்ருர் லஹ்ஹாக்.

"ஆனல் ஒன்று; நம் கட்சியை எடுத்துக் கூறுவதிலே தகராறுகள் ஏற்பட்டால் என்ன செய்வது" என்று கேட்டார்கள் இமாம் அபூ ஹனீபா (ரஹ்).

"நம் இருவருக்கும் நடுவராக (மத்தியஸ்தராக) ஒருவரை வைத்துக் கோள்வோம்" என்ருர் லஹ்ஹாக்.

காரிஜீகளில் ஒருவரே நடுவராக நியமிக்கப்பட்டார். விவாதம் நடைபெற்றுக் கோண்டிருந்தது. திடீரென இமாம் அவர்கள் இடைமறித்து,

"இதே நிலை ஏற்பட்ட பொழுது தான் ஹலரத் அலீ (ரலி) அவர்களும் மத்தியஸ்தத்திற்கு ஒப்பினுர்கள். உம் கட்சி உண்மையானது என்றுதானே நீர் நம்புகிறீர். அப்படியாயின் நீர் ஏன் மத்தியஸ்தத்திற்குச் சம்மதித்தீர்?" என்று கேட்ட பொழுது லஹ்ஹாக் தலையைக் குனிந்து கோண்டே வெளியேறினுர்.

இன்னெரு சமயம் இரு காரிஜீகள் இமாம் அவர்களிடம் வந்தார்கள். "பாவம் செய்தவர்களெல்லோரும் காபிர்கள் என்று நாங்கள் கூறிக் கோண்டிருக்க, நீர் அதை ஒத்துக்கோள்ளாது தீர்ப்புக் கூறிக் கோண்டிருக்கிறீர். இன்று நாங்கள் கேட்பதற்குச் சரியான பதில் கூற வில்லையாயின் உம் உயிர் உம்முடையதன்று" என்று பயமுறுத்தினுர்கள்.

"உங்களுடைய பிரச்னை என்ன" என்று வினவினுர்கள் அபூ ஹனீபா (ரஹ்).

"வெளியிலே இரண்டு பிரேதங்கள் கிடக்கின்றன. ஒரு பிரேதம் வழிதவறி, கருவுற்று, பிள்ளைப் பேறும்போது மரித்தவளுடையது. மற்றது குடிபோதையிலே இறந்தவனுடையது. இவர்கள் இருவரும் காபிரா அல்லது மூமினு-(இறை நம்பிக்கையுடையவர்களா)?" என்று கேட்டனர்.

"வெளியில் கிடக்கும் சடலங்கள், யூதர்களுடையவையா அல்லது மஜூஸிகளுடையவையா?" என்று இமாமுல் அஃலம் கேட்டார்கள்.

"இரண்டுமில்லை, முஸ்லிம்களுடையவை" என்று பதிலிறுத்தனர்.

"உங்கள் வாயினுலேயே இவை முஸ்லிம்களுடைய பிரேதங்கள் என்று கூறிவிட்டீர்கள். பின்னர் என்னிடம் என்ன தீர்ப்புக் கோருகிறீர்கள்" என்று எதிர்க் கேள்வி போட்டார்கள் இமாம் ஹனீபா (ரஹ்).

காரிஜீகள் சற்றுத் திகைத்து நின்றனர்.

"அது கிடக்கட்டும். இவர்கள் சுவர்க்கத்திற்குச் செல்வார்களா அல்லது நரகவாசிகளா" என்று அவ்விருவரும் மறு கேள்வி போட்டார்கள்.

"பாவிகளின் பிழை பொறுப்பது, தண்டிப்பது இவையெல்லாம் அல்லாஹ்வின் நாட்டத்திலுள்ளவையல்லவா" என்று இமாமுல் அஃலம் கேட்டவுடன், தீவிரவாதிகளான இருவரும் தலை குனிந்து விட்டனர்.

இம்மாதிரி எவ்வளவோ தடவைகளில் சாதுர்யமாகப் பேசி ஆத்திரங் கோண்டவர்களை அமைதி கோள்ளச் செய்த அபூ ஹனீபா (ரஹ்) அவர்களுடைய அறிவுப் பெருக்கை எடுத்துக் காட்டும் பல சம்பவங்களை அவர்களின் வரலாற்றிலே காண்கிருேம்.

அரசர்களிடமும், ஆட்சியாளர்களிடமும் சிறிதும் அஞ்சாமலேயே தீர்ப்புக் கொடுப்பார்கள். ஒரு தடவை அப்பாஸிய கலீபா மன்ஸூருக்கும் அவர் மனைவி ஹுர்ரா காத்தூனுக்கும் மனவேற்றுமை ஏற்பட்டு விட்டது. கலீபா மன்ஸூர் மனைவியிடம் நடக்க வேண்டிய நீதத்துடன் நடந்து கோள்ளவில்லை என்பது காத்தூனின் குறை. இருவருக்கும் அபிப்பிராய பேதம் அதிகரிக்கவே, தங்களுக்கிடையே ஒரு மத்தியஸ்தரை வைத்து இதைத் தீர்த்துக் கோள்ளலாம் என்று மன்ஸூர் கூறிய யோசனையைக் காத்தூனும் ஏற்றுக் கோண்டார். மத்தியஸ்தராக இமாம் அபூஹனீபாவை வரவழைப்பது என்று இருவரும் ஒப்பினர்.

இமாம் அவர்கள் வந்ததும், "சட்டப்படி ஒரு முஸ்லிம் எத்தனை பெண்களை மணமுடிக்கலாம்" என்று கேட்டார் அப்பாஸிய கலீபா.

"நான்கு பெண்களை" என்று இமாம் அவர்கள் கூறியதும் வெற்றிப் புன்னகையோடு "கேட்டாயா காத்தூன்" என்ருர் மன்ஸூர்.

"ஆனல் காத்தூனின். வாதம் நீங்கள் நீதத்துடன் நடந்து கோள்ளவில்லை யென்பது. 'இன் கிப்தும் அன்லா தஃதிலூ பவாஹிதத(ன்) (இவர்களுக்கிடையே நீதத்துடன் நடந்து கோள்ள முடியாது என்று நீங்கள் அஞ்சினுல் ஒரே பெண்தான்) என்பது இறைவன் கட்டளை" என்று இமாமுல் அஃலம் முடித்ததும் தாம் தோற்று விட்டதை

உணர்ந்தார் மன்ஸூர்.

தீர்ப்புக்கூறி இமாம் அவர்கள் வீடு திரும்பியதும் சேவகன் ஒருவன் ஐம்பதாயிரம் வெண் காசுகளைக் கொண்டு வந்து "உங்களின் பணியாள் ஹாரூர காத்தூன் இச்சிறு தொகையை உங்களுக்கு அன்பளிப்பாகச் சமர்ப்பிப்பதாகக் கூறும்படி சொன்னார்கள்" என்று நிதியை அபூ ஹனீபா அவர்கள் முன் வைத்தான்.

"இறைவன் தீர்ப்பை எடுத்துச் சொல்வதை என் கடமையாகக் கொண்டு செயலாற்றினேன். இதற்குப் பதிலாக எதையும் பெற நான் ஒப்பவில்லை. இதைக் காத்தூனிடம் சொல்லி, பணத்தை அன்னாரிடமே திருப்பிக் கொடுத்து விடு" என்று சேவகனை அனுப்பி வைத்தார்கள் அபூ ஹனீபா (ரஹ்).

## அன்றாட அலுவல்கள்

இமாமுல் அஃலம் ஒழுங்கான ஒரு திட்டப்படி பிரதி தினமும் செயலாற்றுவார்கள். ஒவ்வொரு நாளும் அதிகாலைத் தொழுகையை நிறைவேற்றியதும், மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பார்கள். இதைத் தொடர்ந்து மார்க்கத் தீர்ப்புகளுக்காகப் பல பிரச்னைகள் அவர்கள் முன்னிலையில் சமர்ப்பிக்கப்படும். அவையனைத்தையும் ஆராய்ந்து பதில் தயார் செய்வார்கள். இதன் பின்னர் மார்க்கச் சட்ட நுணுக்கங்களைப் பயிலும் மாணவர் குழாத்திலே சொற்பெருக்காற்றுவார்கள். இஸ்லாமிய உலகின் பல பாகங்களிலிருந்து இமாம் அவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்க மாணவர்கள் குழுமுவார்கள். உச்சி வேளைத் தொழுகை முடிந்ததும் வீடு திரும்புவார்கள்.

கோடை காலங்களில் உச்சி வேளைத் தொழுகைக்குப் பின்னர் எப்பொழுதும் சிறிது நேரம் துயில் கொள்வார்கள்! அஸர் தொழுகைக்குப்பின் மீண்டும் சிறிது நேரம் கல்வி கற்றுக் கொடுப்பார்கள். இது முடிந்ததும் நண்பர்களைச் சந்தித்து அளவளாவுவார்கள். யாரும் நோயுற்றிருப்பதாகத் தெரிந்தால், அவர்களைக் கண்டு ஆறுதல் மொழி கூறுவார்கள். தங்கள் வாணிபத்தையும் இதற்கிடையே கவனித்துக் கொள்வார்கள். அந்திப் பொழுதுத் தொழுகையை முடித்ததும் மறுபடியும் பாடம் சொல்லிக் கொடுப்பார்கள். இஷாத் தொழுகைக்குப் பின்னரும் தனிமையாக இறை வணக்கத்தில் ஈடுபடுவார்கள். பல இரவுகளில் நித்திரையேயின்றி நித்தியனை நினைந்து நினைந்து நெடிய வணக்கம் செய்வார்கள்.

## அபூ ஹனீபாவின் அற நூல்கள்

இமாமுல் அஃலம் அவர்களின் நூற்களாகப் பிரசித்தியடைந்திருப்பவை பிக்ஹுல் அக்பர், அல் ஆலிமு வல் முதஅல்லிமு, முஸ்னது.

பிக்ஹுல் அக்பர் மார்க்க விதிகளை எடுத்தோதும் ஒரு கட்டுரை அளவு கொண்ட நூல். மிகச் சிறிய இந்நூலுக்கு நீண்ட விளக்கவுரைகள் பலவற்றை அறிஞர் பெருமக்கள் எழுதியுள்ளார்கள்.

ஆனால் இது இமாமுல் அஃலம் அவர்களே தொகுத்ததுதானா என்பதில் பலத்த அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன என்று அல்லாமா ஷிப்லி நுஃமானீ (ரஹ்) தங்கள் "ஸீரதுன் நுஃமான்" என்னும் நூலில் குறிப்பிடுகிறார்கள். அதற்குக்கீழ்க்கண்ட காரணங்களையும் அவர்கள் சுட்டிக் காட்டுகிறார்கள்.

(1) இந்நூலிலே உபயோகப் படுத்தப்பட்டுள்ள பல பதங்கள், அந்தப் பொருள்களிலே, இமாம் அவர்களின் காலத்திலே வழக்கில் இல்லை. உதாரணமாக 'ஜவ்ஹர்" என்னும் சொல், ஒரு வேதாந்தச் சொல்லாக இந்நூலில் வருகிறது. இமாம் அவர்களின் இறுதிக் காலத்தில் தத்துவஞான நூல்கள் கிரேக்க மொழியிலிருந்து அரபியில் மொழி பெயர்க்கப்பட்ட பொழுதுதான் இப்பதம் பயன்படுத்தப்பட்டது. ஆகவே இதை இமாம் அவர்கள் இம்மொழி பெயர்ப்புக் காலத்திற்கு முன்னர் எழுதப்பட்டதாகச் சொல்லப்படும் தங்கள் நூலில் பயன்படுத்தியிருக்க முடியாது.

(2) இமாம் அவர்களிடம் நூற்றுக் கணக்கான மாணவர்கள் கல்வி பயின்றார்கள். இவர்களில் யாரும் இந்நூலைக் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை.

(3) இமாம் அவர்கள் ஹிஜ்ரீ 150-ஆம் ஆண்டு மரணமடைந்தார்கள். அதற்குப் பின்னர் ஏறத்தாழ 350 ஆண்டுகள் இந்நூலைப் பற்றிய தகவலே இல்லை. ஹிஜ்ரீ 500-ஆம் ஆண்டுக்குப் பின்னர் தான் இந்நூலைப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது.

(4) இந்நூல் இமாம் அவர்கள் எழுதியதாக முதன் முதலில் குறிப்பிடும் அபூ முதீஃ பல்கீ என்பாரைப்பற்றி முஹத்திதீன் (ஹதீது தொகுப்பாளர்களும், விரிவுரையாளர்களும்) சந்தேகத்தோடு தான் கணித்திருக்கிறார்கள்.

இந்நான்கு காரணங்களையும் அல்லாமா ஷிப்லீ நுஃமானீ (ரஹ்) விளக்கி விட்டு, இந்நூல் அபூமுதீஃ பல்கீ எழுதியிருக்கலாமென்றும், மெதுவாக இதை இமாம் அவர்களே எழுதியதாகப் பின்னர் அவர் பிரசாரம் செய்து விட்டதாகவே தாம் நம்புவதாகவும் குறிப்பிடுகிறார்கள்.

"அல் ஆலிமு வல் முதஅல்லிமு" என்னும் நூல் கேள்வி பதில் முறையில் மார்க்கச் சட்டங்களைப்பற்றிய ஒரு மிகச் சிறு புத்தகம் என்றும், அது தம் பார்வையில் பட்டதில்லையென்றும் ஷிப்லீ நுஃமானீ கூறுகிறார்கள்.

"முஸ்னது" என்பது இமாம் அவர்கள் கையாண்டதாகச் சொல்லப்படும் நபி பெருமானாரின் ஹதீதுகளைக் கொண்டு தொகுத்த நூல். இந்நூலின் தொகுப்பாளர் அபுல் முஅய்யத் முஹம்மதிப்னு மஹ்மூதுல் காரிஸ்மீ (ரஹ்) ஹிஜ்ரீ 665-ஆம் ஆண்டு அவர்கள் இந்நூலைத் தொகுத்து, முன்னுரையிலே கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டிருப்பதாக ஷிப்லீ நுஃமானீ எழுதுகிறார்கள்.

"இமாம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்களுக்கு ஹதீதுகளிலே ஈடுபாடு கிடையாது என்று ஷாம் (ஸிரியா) நாட்டில் சில அறிவிலிகள் கூறக் கேட்டேன். இதனால்

பேருணர்வு பெற்ற நான் அபூ ஹனீபா (ரஹ்) அவர்கள் கையாண்டதாக உலமாக்கள் உரைத்திட்ட ஹதீதுகள் அனைத்தையும் ஒன்று திரட்டி, ஒரு நூலாக்க வேண்டுமென்று விரும்பினேன்..........."

இந்த ஹதீதுகளை 13 நூற்களிலிருந்து தொகுத்ததாகவும் அன்னூர் கூறுகிறார்கள். ஆனால் இந்த ஹதீதுகளும் பெரும்பாலும் பெருமானார் காலத்திற்குப் பின்னர் சிலரால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கலாம். இமாம் அபூ ஹனீபா (ரஹ்), இமாம் ஷாபிஈ (ரஹ்) ஆகிய இரு பெரும் அறிஞர்களும் ஹதீதுகளை வைத்துத் தீர்ப்பளிப்பதில் மிகக் கவனமாக இருந்தார்கள். நபி பெருமானார் (ஸல்) அவர்களின் உண்மையான திருவாய் மொழிகள் மிகச் சிலவே நமக்குக் கிடைத்திருக்கின்றன என்று இமாம் அபூ ஹனீபா (ரஹ்), இமாம் ஷாபிஈ (ரஹ்) ஆகிய இரு மார்க்க மேதைகளும் நம்பியதாக ஷிப்லீ நுஃமானீ உறுதியாகக் கூறுகிறார்கள். "அறிவுக்கு முரணாகச் சொல்லப்படும் ஹதீதுகளெல்லாம்" பெருமானார் திருமொழிகளல்ல; அவை பற்றிச் சிந்தனை செய்ய வேண்டியதில்லை என்னும் கொள்கையை இமாம் அபூ ஹனீபா அவர்கள் கடைப்பிடித்தார்கள். இதை மேலும் விளக்கிய இப்னு ஜவ்ஸீ "அறிவுக்கு முரணாகவோ, இஸ்லாமிய அடிப்படைகளுக்கு முரணாகவோ இருக்கும் ஹதீதுகள்" பெருமானார் மொழிந்தவையாக நம்பக்கூடியவையல்ல"என்று குறிப்பிடுகிறார். இமாம் அபூ ஹனீபா (ரஹ்) தங்கள் வாழ் நாள் முழுவதிலும் தீர்ப்புகள் அளிக்கும் வேலையில் மொத்தம் 17 ஹதீதுகளையே உபயோகப்படுத்தியதாகக் கூறப்படுகிறது.

### இமாம் அவர்களின் இறுதிக் காலம்

அபூ ஹனீபா (ரஹ்) அவர்களின் அந்திய காலம் ஒரு சோக சரித்திரம். அப்பாஸீய வம்சத்தினர் அநியாயமாக ஹலரத் அலீ (ரலி) அவர்களின் வம்சத்தினரிடமிருந்து அரசுரிமையைப் பிடுங்கிக் கொண்டதாக கிளர்ச்சிகள் நடந்தன. முஹம்மது அந்நப்ஸு தகிய்யா என்னும் தூயவரின் தலைமையிலே நடந்த இக்கிளர்ச்சிக்கு நெறி தவறு எல்லா அறிஞர் பெரு மக்களும் ஆதரவு கொடுத்தனர். ஆனால் கிளர்ச்சி நடத்திய தூயவர் போர் முனையிலேயே மடிந்தார். இருந்தும் கிளர்ச்சி அடங்கவில்லை. மக்கள் எழுச்சியின் வேகத்தைக் கேள்வியுற்ற கலீபா மன்ஸூர், கதி கலங்கி விட்டார். பல மாதங்கள் அவர் உடுத்திய உடையைக்கூட மாற்றாமல் திக்பிரமை பிடித்திருந்தார்.

முஹம்மது அந்நப்ஸு தகிய்யாவின் தம்பி இப்றாஹீம் அப்பாஸீய எதிர்ப்புக் கிளர்ச்சியைத் தொடர்ந்து நடத்தலானார். ஹலரத் அலீ (ரலி) அவர்களின் வாரிசுகளுக்கு ஆட்சியைப் பெற்றுத் தருவதாக வாக்களித்து உமய்யாக்களை எதிர்த்துப் போரிட்டோரின் பட்டியலில் இடம் பெற்ற அப்பாஸீயாக்கள், பிறகு தாங்களே அரசை அபகரித்துக் கொண்டது பெருத்த அநீதி என்று இமாம் அபூ ஹனீபா (ரஹ்), இமாம் மாலிக் (ரஹ்) ஆகிய இருவரும் தீர்ப்பளித்த பின்னர் கிளர்ச்சி பெரும் வலிமை பெற்றது.

இமாம் அபூ ஹனீபாவைச் சிறையிலடைத்து விட்டால், மக்களின் கிளர்ச்சி தணியும் என்றெண்ணிய கலீபா மன்ஸூர், இமாம் அவர்களைக் கைது செய்தார். சீரும், சிறப்பும் பெற்ற இச் சிந்தனையாளர், பேரும் பெரு மதிப்பும் பெற்ற பெருந்தகையாளர், அறிவுக் களஞ்சியமென்று அவனியெங்கும் அக மகிழ்வுடன் கொண்டாடப்படும் ஆத்மீகக் கருவூலம்–ஆட்சி பீடத்தை அநியாயமாக அபகரித்த மன்ஸூரால் சிறையில் தள்ளப்பட்டார்கள்.

அவர் ஆட்சி பீடத்தில் வீற்றிருப்பது சரி என்று இமாம் அவர்கள் ஒத்திருந்தால், அன்று அப்பாஸீய ஆட்சியிலே மாபெரும் பதவி அளிக்கப்பட்டிருப்பார்கள். அரசாங்கம் அவர்கள் சொல் கேட்டு அதிர்ந்திருக்கும். ஆனால் உண்மையை வாழ்க்கையின் உரைகல்லாக, வாய்மையையும், தூய்மையையும் வாழ்வின் இலட்சியமாகக்கொண்ட இமாம் அபூ ஹனீபா (ரஹ்) அப்பாஸீய கலீபாவின் இனிய மொழிகளுக்கு இணங்கவில்லை.

சிறையிலடைக்கப்பட்டும், மக்கள் கூட்டம் கூட்டமாக அவர்களைக்கண்டு மரியாதை செய்து விட்டுச் செல்வார்கள். மாணவர்களும், அறிஞர்களும் ஆங்கு வந்து அவர்களுடன் உரையாடி உளமகிழ்வார்கள். சிறைக் கூடத்திலும், அவர்களின் சிறப்பு சிதையாமலிருப்பதைக்கண்டு சினங்கொண்டார் மன்ஸூர். தம் ஆட்சியை நியாயமானதென்று ஒத்துக்கொள்ள வேண்டும், இல்லையென்றால் தினம் அவர்களுக்கு 10 கசையடிகள் கொடுக்க வேண்டும் என்று அவர் பணித்தார். கசையடிகளைக் கண்டா கலங்கப் போகிறது அவர்களின் உள்ளம்? அவைகளையும் பொறுமையுடன் ஏற்றுக் கொண்டார்கள்.

தம் திட்டம் இதிலும் நிறைவேறாததைக்கண்ட மன்ஸூர் உணவிலே ஒரு சிறிது நஞ்சைக் கலந்து கொடுக்க உத்தரவிட்டார். அந்த உணவை அருந்தியதிலிருந்து இமாம் அவர்களின் உடல் நிலை சீர் கேடடையலா

யிற்று. விஷம் தங்கள் உயிரைக் குடிக்கும் காலம் நெருங்கி விட்டதை உணர்ந்ததும், அபூ ஹனீபா (ரஹ்) நீண்ட நேரம் 'ஸஜ்தா' செய்து—அடி—பணிந்து ஆண்டவனை வேண்டிக் கிடந்தார்கள்.

அபூ ஹனீபா (ரஹ்) மரணச் செய்தி பக்தாது பட்டணத்திலே பரவியதும் தத்தம் வேலைகளை அப்படியே விட்டு விட்டு மக்கள் சிறைச்சாலைக்கு விரைந்தனர். அறிவுக் களஞ்சியத்தின் புனித உடலை மக்கள் கண்ணீரால் கழுவினர்கள்; அன்று பக்தாதிலே நீர் சிந்தாக் கண்களோ, கசிந்துருகா நெஞ்சங்களோ இல்லையெனலாம்.

பக்தாது நகர காஸீயான ஹஸனுப்னு அமாரா, "மார்க்கச் சட்ட அறிஞர்களில் மாபெரும் மேதை நீங்கள்; இறை வணக்கம் செலுத்திய அடியார்களிலே சிறப்புப் பெற்றவர்கள்; துறவிபோல் வாழ்ந்த தூயவர் நீங்கள்; உங்கள் அளவுக்கு எவருமே உயர முடியா நற்பண்புகளைப் பெற்றவர்கள்" என்று கூறிக்கொண்டே புனித மேனியை நீராட்டினர்கள்.

இமாம் அவர்களுக்கு இறுதியாக மரியாதை செலுத்த வந்த மக்கள் எல்லோரும் ஒரு தடவையிலே ஜனாஸாத் தொழுகையில் பங்கு பெற முடியாது என்று கண்ட இமாம் அவர்களின் அருமை மைந்தர் ஹம்மாது (ரஹ்) ஆறு தடவை ஜனாஸாத் தொழுகை தொழ வைத்தார்கள். பக்தாது நகரிலே கய்ஸரான் பகுதியிலே அவர்களின் சடலம் அடக்கப்பட்டது. இதற்குப்பின் இஸ்லாமிய உலகின் பல பாகங்களிலிருந்து மக்கள் வந்து ஜனாஸாத் தொழுகை தொழுது கொண்டிருந்தார்கள். இருபது நாள்வரை தொடர்ந்து ஜனாஸாத் தொழுகை நடைபெற்றது.

அறிவுக் கருவூலம், ஆத்மீகத்தின் சின்னம், அபூ ஹனீபா மறைந்தார்கள்; ஆனல் அவர்களின் பெயரும், பெருமையும் இன்றும் நிலை பெற்றிருக்கின்றன.

அவர்கள் மறைவுக்குக் காரணமாக இருந்த அப்பாஸீய கலீபாவை, மன்ஸூர் அஸ்ஸப்பாஹ்—இரத்தம் சிந்திய மன்ஸூர்—என்று வரலாற்றாசிரியர்கள் வர்ணித்திருக்கிறார்கள்.

ஆனல் மறைந்த மாமேதையை அறிவுக் களஞ்சியமாக, அறவாழ்வின் அணிகலனாக அறிவுடை உலகம் கொண்டாடுகிறது!

முற்றும்

### கல்வி ஒளி!

தன் அறையில் தான் பார்த்துப் படிப்பதற்கு மட்டும் விளக்கைப் பயன்படுத்துபவனைப் போல, மனிதன் தான் பெற்ற கல்வியைத் தனக்கு மட்டும் பயன் படுத்தக்கூடாது.

கடலின் இருளிலே வெகு தூரத்திலிருப்போரையும் காண வைக்கும் கலங்கரை விளக்கத்தின் ஒளியைப் போன்று, எல்லோருக்கும் அவன் கல்வி பயன் தரவேண்டும். —பீச்சர்

தென்கிழக்கு ஆசியாவில் எனது அனுபவங்கள்

எழுதுபவர்: எம். எஸ். அப்துல் மஜீது பி. ஏ.




இரங்கூன் சோலியா முஸ்லிம் அஸோஸியேஷன் ஆதரவில் 26-1-53-இல் எங்கள் தூது கோஷ்டிக்கு அளிக்கப்பட்ட வரவேற்பு உபசாரம் பலவகைகளில் முக்கியத்துவம் வாய்ந்தது.

பர்மாவின் பலதரப்பட்ட தொழில்களிலும் ஈடுபட்டிருக்கும் தென்னிந்திய முஸ்லிம்களை ஒருங்கே காணுவதற்கு அந்த உபசரிப்புக் கூட்டம் சிறந்த வாய்ப்பாக அமைந்தது. சங்க மண்டபத்தில் இடவசதியின்றி ஏராளமான பேர் வீதிகளில் நின்று சொற்பொழிவுகளை ஒலிபெருக்கி மூலம் கேட்டார்கள். ஜனப் ஏ. எம். எஸ். ஹமீது பி. எஸ். ஸி. பி. ஏ., பி. எல்., அக்கூட்டத்துக்குத் தலைமை தாங்கினர். சங்கச் செயலாளர் ஜனப் பி. எஸ். கே. அப்துர் ரஹ்மான் தூதுக் குழுவினருக்கு உபசாரப் பத்திரங்கள் வாசித்தளித்தார். இதற்கு பதிலளிக்கும் முறையில் காயிதே மில்லத் ஜனப் இஸ்மாயீல் ஸாஹிப் அவர்கள் சுமார் ஒன்றரை மணி நேரம் ஆற்றிய அரியசொற்பொழிவில் மிளிர்ந்த சில முக்கிய கருத்துக்களை இங்கே குறிப்பிடுவது பொருந்தும்.

"பர்மாவிலுள்ள, சோலிய முஸ்லிம் அசோஸியேஷன் மீது எனக்கு அதிக மதிப்புண்டு. கடந்த 40 வருடகாலமாக இந்த ஸ்தாபனத்தின் நடவடிக்கைகளை நான் கவனித்துள்ளேன். இச் சங்கம் பொதுவாக பர்மாவின் நன்மைக்காகவும், சிறப்பாக இந்தியாவிலிருந்து வந்து பர்மாவில் வர்த்தகம் செய்யும், தென்னிந்திய முஸ்லிம்களின் உயர்வுக்காகவும் பணியாற்றுவதை நான் புகழாமலிருக்க முடியாது.

"நாம் இந்திய பிரஜைகள். இந்தியாவிடம் விசுவாசமுள்ளவர்கள். அன்னிய நாடுகளில் வசிக்கும் இந்திய பிரஜைகளாகிய நாம் இந்தியாவின் கௌரவத்தை ஆங்காங்கு நிலைநாட்ட

வேண்டும். அந்தந்த நாட்டு மக்களுடன் நேசமாக வாழ்ந்து அந் நாடுகளுக்கும், இந்தியாவுக்கு மிடையே உள்ள உறவை வளரச் செய்ய வேண்டும். இந்த உயரிய நோக்கம் பூர்த்தியாவதற்கு இங்குள்ள இந்திய முஸ்லிம்கள் பர்மா தேசத்தின் அபிவிருத்திப் பணிகளில் பூரண பங்கெடுத்துப் பாடுபட வேண்டும்.

“முற்காலத்திலிருந்தே இந்தியர்கள் பல நாடுகளுக்கும் சென்று வசித்து வருகிறார்கள். இதற்கு அறிகுறியான எத்தனையோ சின்னங்கள் இன்றும் ஆங்காங்கே இருக்கின்றன. முஸ்லிம்களாகிய நாமும் இந்தியர்கள் என்ற முறையில் வெளி நாடுகளுக்கு வந்துள்ளோம்.

“இங்குள்ள இந்தியர்களுக்கு பர்மா சர்க்கார் செய்து கொடுத்திருக்கும் பல வசதிகளுக்காக பர்மா சர்க்காருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

“நாம் நெருக்கடியான உலகில் இன்று வாழ்கின்றோம். எங்கும் சுயநலம் பரந்து உலகமே அல்லோல கல்லோலப் படுகிறது. எங்கும் பீதி, குரோதம், சந்தேகம் மிகுந்துள்ளன. மக்களிடையே சன்மார்க்க பக்தி குறைந்து விட்டதே இதற்குக் காரணம்.

“இன்றைய உலகில் கடவுள் நம்பிக்கை மக்களிடையே குறைந்து வருகின்றது. ஒரு கூட்டத்தினர் கடவுளாவது மார்க்கமாவது என பேசவும் எழுதவும் ஆரம்பித்து விட்டனர். இதற்கென கோடிக்கணக்காக ரூபாய் செலவிடப்படுகிறது. இது சம்பந்தமான நூற்கள் ஏராளமாக வெளி வருகின்றன. இந்நூற்களில் பெரும்பாலானவற்றை நான் படித்து மிருக்கிறேன். ‘கடவுள்’ என்பதும், ‘மார்க்கம்’ என்பதும் பணத்தைத் திரட்டுவதற்காக ஒரு சிலரால் ஏற்படுத்தப்பட்டது என அவர்கள் கூறுகிறார்கள். அப்படிச் சொல்வதைக் கேட்டு மயங்கி விடுபவர்கள் நம்மில் சிலருமிருக்கிறார்கள். இந்நிலை பெருகுமானால் உலகுக்கு ஓர் ஆபத்து என்றே சொல்லலாம். கடவுள் நம்பிக்கை முஸ்லிம்களிடம் மட்டுமல்ல, பொதுவே எல்லோரிடத்திலும் குறைந்து வருகிறது என்றே சொல்கின்றேன்.

“முஸ்லிம்களின் வழிகாட்டி நபிபெருமான் (ஸல்) அவர்கள் மனம் வைத்திருந்தால் உலகத்தின் எல்லா ஐஸ்வர்யத்தையும் எளிதில் அடைந்திருக்க முடியும். ஆனால் அவர்கள் தம் நலத்தைக் கருதாது, தமக்குக் கிடைக்கும் பொருள் அனைத்தையும் கிடைத்த அன்றே ஏழை மக்களுக்குக் கொடுத்து விடுவார்கள். மறுதினம் உணவில்லாமல் பட்டினி கிடப்பதுமுண்டு. அவர்கள் தங்களது வாழ்நாளில் தொடர்ச்சியாக உணவு உண்டது கிடையாது. தொடர்ச்சியாக இரண்டு வேளை சாப்பிட்ட நாளும் கிடையாது. அவர்கள் ஏன் இவ்விதம் வாழ்க்கை நடத்தியிருக்கவேண்டும்.? “மார்க்கத்தைத் தங்களின் சுயநலத்திற்காகவா உபயோகித்தார்கள். சுயநலத்திற்கு மார்க்கம் உபயோகபடுத்தப் படுகின்றது” என்கின்றார்களே. அவ்வாறு நடைபெற்றுள்ளது? நான் சொல்வது கட்டுக் கதையல்ல; சரித்திரத்தின் உண்மை.

“உண்மை இவ்வாறிருந்தும் கூட ஒரு கூட்டத்தார், மாறுபட்டுச் சொல்வதைக் கேட்டு மயங்கி அப்பக்கம் சாய்ந்து விடுபவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் தங்கள் கொள்கையைச் சரியென்று வாதிப்பதானால் நாமொன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் ஒன்று: மார்க்கத்தைப் புறக்கணிப்பதற்கோ கடவுளைப் பற்றிக் கேள்வி கேட்பதற்கோ முன்னர் அவற்றைப்பற்றிச் சரியான முறையிலே கற்றறிந்து கொள்ளுவார்களானால் மிகவும் நன்மையாகும்.

“மக்களைச் சீர்திருத்துவதற்கும், மக்களின் நலனைப் பாதுகாப்பதற்கும் சர்க்கார் சட்டம் தான் இருக்கின்றதே, மார்க்கச் சட்டம் வேறு எதற்காக என்று கேட்கலாம். கேட்கவேண்டிய கேள்விதான்.

“சர்க்கார் சட்டம் எப்பொழுது நடைமுறைக்கு வருகிறது? சட்டம் உடைக்கப்பட்ட பின்னர், மீறப்பட்ட பின்னர்தான் சர்க்கார் சட்டம் அமுலுக்கு வருகின்றது. சட்டம் மீறப்பட்டதற்காக தண்டனை விதிக்கப்படுகின்றது. ஆனால் சட்டத்தை மீறாமலிருக்கும்படி மக்களை இச்சட்டம் தடை செய்ய முடிகிறதா? மக்களுக்குப் பல தீய நினைவுகள் உதிக்கின்றன. இவ்வித நினைவுகள் ஏற்படாதிருக்கும்படி சர்க்கார் சட்டம் கட்டுப்படுத்த முடியுமா? மக்கள் உள்ளத்தில் என்ன நினைவு ஏற்படுகின்றது என்பதை இச்சட்டம் கண்டறிய முடியுமா? ஒருவர் உள்ளத்தில் கெட்ட எண்ணம் உருவாகியது என்பதற்காக சர்க்கார் சட்டம் அவரைத் தண்டிக்க முடியுமா?

“ஆனால் தீய எண்ணம் மனதில் உதிக்காமல் தடை செய்வதற்குச் மார்க்கச் சட்டம் இன்றியமையாதது. கடவுள் நம்பிக்கை, கடவுள் பயம் இருந்தால்தான் ஒருவருக்கொருவர் அநீதி செய்யமாட்டார். நான் கூறுவது சரித்திர பூர்வமான உண்மை. தெய்வ நம்பிக்கை மறுபடியும் வந்தால் உலகத்தில் சுபிட்சமுண்டு.

“கடவுள், மார்க்கம் என்பவைகள் சம்பந்தமாக அக்கரைக் கொள்ள சந்தர்ப்பமில்லாத “லண்டன் டைம்ஸ்” பத்திரிகை கூட உலக யுத்தத்தின் பொழுது, பிரிட்டிஷ் மக்கள் ஏராளமாக மாண்டு மடிந்ததை “கடவுள் பக்தி குறைந்துவிட்டது. இதனால்தான் நமக்கு இவ்வித சோதனை ஏற்பட்டுள்ளது. நமது மக்களிடை கடவுள் பக்தி வளர்ந்தால்தான் நாம் நலம்பெற முடியும்” என எழுதியது.

“கல்வியும், மார்க்கக் கல்வியும் நம்மிடை குறைந்து வருவதால், நம்மிடை கடவுள் நம்பிக்கையும் குறைந்து வருகிறது. கடவுள்

நம்பிக்கை தளராதிருக்கச் செய்வதற்கு உயர்தரக் கல்வியை—மார்க்கக் கல்வியை, போதிக்க வேண்டும். இந்த நோக்கத்துடன் தான் நாங்கள் தென்னிந்தியாவில் நமக்குச் சொந்தமான கல்லூரிகளை நிறுவப் பாடுபட்டு வருகிறோம். இதுவரையும் நான்கு கல்லூரிகள் நிறுவப்பட்டுள்ளன.

"இவ்வித கல்லூரிகளை நிர்வகித்துச் செல்வதற்கு ஆங்காங்குள்ள முஸ்லிம்களின் உதவியும் ஆதரவும் அதிகமாகத் தேவைப்படுகிறது. எனவே, பர்மா வாழ் இந்திய முஸ்லிம்கள் பர்மா சர்க்காரின் சட்டதிட்டங்களுக்குட்பட்ட முறையில் எந்த வகை உதவிகள் செய்ய முடிகிறதோ அந்த உதவிகளை நாங்கள் பெரிதும் வரவேற்கிறோம்."

'மெள்ள மெள்ளப் பாயும் தண்ணீர், குளிரப் பாயும்' எனும் முதுமொழிக்கிணங்க சாதாரண நடையில் யாவரும் விளங்கிக் கொள்ளக் கூடிய முறையில் உயரிய கருத்துகளைக் கொண்ட மாபெரும் தலைவரின் சொற்பொழிவு மக்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டதைக் கூடியிருந்த மக்களின் முகங்களில் தோன்றிய உணர்ச்சியிலிருந்து அறிந்தேன். தலைவர் சொற்பொழிவு முடிந்ததும் தக்பீர் முழக்கம் சங்க மண்டபத்தை அதிரச் செய்தது. அந்த அதிர்ச்சி எங்கள் குழுவினருக்குத் தகுதியான உதவி கிடைக்குமா என சிலரின் மன ஆகாயத்தில் நிறைந்திருந்த சந்தேக மேகங்கள் கலைந்து விட்டன என்றே சொல்ல வேண்டும்.

அடுத்தபடியாக ஜனாப் ஜமால் முஹைதீன் சாஹிபு அவர்கள் ஆங்கிலத்தில் சுருக்கமாகச் சொற்பொழிவாற்றி தனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

இறுதியாக நான் பேசும் போது ஆங்கில கல்வித் துறையிலும், இஸ்லாமிய கல்வித் துறையிலும் இந்திய முஸ்லிம்கள் எடுத்த முயற்சியின் சரித்திரத்தைச் சுருக்கமாக எடுத்துக் கூறினேன்.

"பண்டைக் கால முதல், முஸ்லிம்கள் இந்தியாவில் வசித்து வருகிறார்கள். அவர்களின் வேர் இந்திய நாட்டு மண்ணில் ஆழ்ந்து படர்ந்திருக்கிறது. நமது மூதாதைகள் இந்தியாவில் சந்ததி சந்ததியாக வாழ்ந்து வந்தார்கள். அவர்களின் எலும்புகள் இந்தியாவில் புதைந்து கிடக்கின்றன. மற்ற இனத்தவர்களுக்கு இந்தியாவில் எவ்வளவு சுதந்திரமிருக்கின்றதோ அவ்வளவு சுதந்திரம் நமக்குமுண்டு. இந்தியாவின் சுதந்திரத்திலும், கண்ணியத்திலும் மற்றவர்களுக்கு எவ்வளவு அக்கரை இருக்கின்றதோ அவ்வளவு அக்கரை நமக்குமுண்டு. இந்தியாவின் சுதந்திரத்தையும், கண்ணியத்தையும் பாதுகாக்க இந்திய முஸ்லிம்கள் எல்லாத் தியாகங்களையும் செய்யத் தயாராக இருக்கிறார்கள்.

"நாம் புதுக் கல்லூரிகளை ஆரம்பித்தோமென்றால் அவை நமக்காக மாத்திரமல்ல. நாட்டு மக்கள் எல்லோரின் நன்மைக்காக என்பதைப் பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்."

இரவு 9 மணிக்கு ஆரம்பமான கூட்டம் வந்தனோபசாரத்துடன் இரவு 1 மணிக்குக் கலைந்தது.

கூட்டத்தின் நடவடிக்கைகளை 'சாந்தி'யும், 'ரஸிக ரஞ்சனி'யும் முதலிடம் தந்து பிரசுரித்திருந்தன.

மக்கள் கேட்டதும், பத்திரிகைகளில் படித்தும் இன்னும் கேட்கவும், படிக்கவும் அவர்களைத் தூண்டின. உணர்ச்சியின் பெருக்கை தலைவராலும் தடுக்க முடியவில்லை. இரங்கூனின் பல பகுதிகளில் கூட்டங்களுக்கு ஏற்பாடாகி விட்டது.

இஸ்லாமிய சமுதாயம் தூங்கி விட்டது என்கிறார்கள். ஆனால் அது எந்தச் சமயத்தில் தனது எல்லா உணர்ச்சியுடனுமிருக்கின்றதோ அது தான் அதன் தூக்கம் என்பது எனது சுற்றுப்பிரயாண அனுபவம். ஒரு பம்பரம் தரையில் நின்று ஆடும் சமயம் அதன் வேகத்தின் உச்ச நிலையை அடைகிறது. அந்தத் நேரத்தில் அதைப் பார்த்தால் அது ஆட்டமின்றி ஸ்தம்பித்து நிற்பது போன்று நமக்குத் தோன்றுகிறது. பம்பரத்திற்கு அந்தத் தன்மை ஏற்படும் சமயம் ஆங்கிலத்தில் பம்பரம் தூங்குகின்றது என்று சொல்வார்கள். இஸ்லாமிய சமுதாயத்தின் 'தூக்கம்' பம்பரத்தின் 'தூக்கம்' போலும்!

மறு நாள் (27-8-53) கிழக்கு இரங்கூன் பாம்லா மஸ்ஜிதில் கூட்டம். கூட்டத்தை ஏற்பாடு செய்தவர்கள் "ஜான் அடுன் மோட்டார் மர்ச்சண்ட்ஸ் அஸோஸியேஷன்". இந்த சங்கம் கிழக்கு இரங்கூனில் அடர்ந்து வர்த்தகம் செய்யும் இரும்புவர்த்தகர்களின் பிரதிநிதி ஸ்தாபனம். இந்த வர்த்தகர்கள் அநேகமாக எல்லோரும் இராமநாதபுரம் மாவட்டத்தைச்சார்ந்த முதுகுளத்தூர், அரிய நாயகிபுரம் போன்ற கிராமங்களிலிருந்து வந்து குடியேறிய முஸ்லிம்கள். இவர்கள் தலைவரவர்களுக்கும் எங்களுக்கும் காட்டிய உற்சாகத்திற்கு அளவே இல்லை. பள்ளிவாசலும் அதைத் தொடர்ந்திருந்த கடைகளும் அழகிய தோரணங்களாலும் பிரகாசம் பொருந்திய மின்சார விளக்குகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. கிழக்கு இரங்கூன் சோலிய முஸ்லிம்களுடைய தொண்டர் படையினர் அழகிய உடையணிந்து அணி வகுத்து நின்றார்கள். எங்கும் வெள்ளை இளம்பிறை தாங்கிய பச்சை நிறப்பட்டுக் கொடிகள் விமரிசையாகப் பறந்து கொண்டிருந்தன. மக்கள் பள்ளிவாசல் உள்ளும் புறமும் திருவிழா போன்று திரளாகக் கூடியிருந்தார்கள். இந்திய நாடு பிரிவினைக்கு முன்பு முஸ்லிம் லீக் ஸ்தாபனத்தில் கண்ட காட்சிகள் என் கண் முன் வந்து நின்றன.

காதலன் காதலியைச் சந்தித்த போது உன்னை விட்டுப் பிரிந்திருந்த சமயம் நான் உன்னை நினைப்பதில்லை என்றான். ஆத்திரத்தோடு காதலி, "ஏன்?"

என வினவினுள், "நான் உன்னை மறந்திருந்தால் தானே" என்ருன் காதலன். சமுதாயத்தின் ஸ்தாபனத்தை யார் நினைக்கிருர்கள் என்கின்றீர்கள்? ஸ்தாபனத்தை மறந்தால்தானே மக்கள் அதை நினைவு படுத்த வேண்டிய அவசியம். என்றும் அது அவர்களின் உள்ளத்தில் ஜிப்ரால்டரின் பாறை போன்று நிலைத்து நிற்கின்றது. அப்பாறை மீது உற்சாகத்தின் அலைகள் ஆரவாரத்துடன் மோதிக்கொண்டு தானிருக்கின்றன. "பம்பரத்தின் தூக்கம்"!

கூட்டத்தைப் பள்ளி இமாம் ஜனுப் ஷம்ஸுத்தீன் சேட் ஆலிம் அவர்கள் ஆரம்பித்து தூது கோஷ்டியின் உயரிய நோக்கத்தை விவரித்துப்பேசினுர்கள். அடுத்தபடியாக ஜனுப் முஹம்மது ஷரீபு அவர்கள் வரவேற்பு உபசார பத்திரம் வாசித்தளித்தார்கள்.

வரவேற்புக்குப் பதிலளிக்கும் முறையில் காயிதே மில்லத் திருகுர்ஆனில் காணக் கிடக்கும் உயரிய வாழ்க்கைத் திட்டம் ஆதி இஸ்லாமிய மக்களின் உன்னதப் பண்பு, சமீப காலத்தில் தென்னிந்திய முஸ்லிம்கள் கல்விக்காகச் செய்து வரும் முயற்சி இவைகள் சம்பந்தமாக ஒரு மணி நேரம் சொற்பொழிவாற்றினுர்கள். ஜனுப் ஜமால் முஹைதீன் அவர்களும் நானும் தலைவரைத் தொடர்ந்து பேசினேம். கூட்டத்தில் ஏற்பட்ட உணர்ச்சிக்கு அளவே இல்லை. கிழக்கு இரங்கூன் இரும்பு வர்த்தகர்களின்

இரங்கூன் சோலியா முஸ்லிம் சங்க வரவேற்பின் போது எடுக்கப்பட்ட படம்.

முக்கியஸ்தர்கள் தூதுகோஷ்டிக்குத் தங்களால் கூடுமான எல்லா உதவிகளைச் செய்வதாகவும், இரும்பு வர்த்தகர்கள் சம்பந்தப்பட்டவரை கல்லூரிகள் கமிட்டி ஒன்று நிறுவி நன்கொடை வசூலித்து, தூதுகோஷ்டிக்கு ஒரு பண முடிப்பாகக் கொடுக்கப்போவதாகத் தெரிவித்தார்கள். தக்பீர் முழக்கத்துடன் கூட்டம் இனிதுகலைந்தது.

கூட்டம் நடந்த அன்று காலை பர்மா அரசாங்கத்தின் தொழில் மந்திரி கனம் அப்துர் ரஷீத் அவர்களைச்சந்தித்தோம். எங்கள் தூதுகோஷ்டி சம்பந்தப் பட்டவரை இந்தச் சந்திப்பை அதி முக்கியம் வாய்ந்ததென்றே சொல்ல வேண்டும். ஏனென்றுல் பர்மாவிலிருந்து அன்னிய நாடுகளுக்குப் பணம் அனுப்பும் சம்பந்தமாக பர்மா அரசாங்கம் கண்டிப்பான சட்டத்தைக் கையாண்டு வருகிருர்கள். இதை ஞாபகத்தில் வைத்துத்தான் நாங்கள் இரங்கூன் வந்த சமயம் எங்களை வரவேற்க வந்தவர்கள், 'நீங்கள் பணம் வசூல் செய்வது கடினம், அப்படியே பணம் வசூலித்தாலும் பணத்தை உங்களால் இந்தியாவுக்கு அனுப்ப முடியாது' என்றுர்கள். எங்களுக்கு இப்பிரச்னையைத் தீர்த்து வைக்க கனம் அப்துர் ரஷீத் அவர்கள் மிகவும் உதவியாக இருந்தார்கள். அவர்களின் உதவி எங்களுக்குக் கிடைக்காமலிருந்தால் பர்மாவில் எங்கள் நோக்கம் பூர்த்தியாகியிராது.

தென்னிந்திய முஸ்லிம் கல்விச் சங்கம் முஸ்லிம் உயர்தரக் கல்விக்கு சென்ற ஐம்பதாண்டுகளாகச் செய்து வரும் அரும் பணியை தற்சமயம் ஜப்பானில் இந்திய ஸ்தானிகராக இருக்கும் கனம் அப்துர் ரஊப் நன்கறிந்தவர்கள். சங்கத்தின் முன்னேற்றத்திற்காக அவர்கள் எத்தனையோ வகையில் உதவி செய்துள்ளார்கள். அவரைப் போன்றே அவரின் சகோதரர் கனம் அப்துர் ரஷீத் அவர்களும் நம் சங்கத்தில் ஆழ்ந்த அபிமானி. தூதுகோஷ்டித் தலைவர் கனம் மந்திரி அவர்களைச்சந்தித்த போது எங்கள் நோக்கத்தைத் தெரிவித்தார்கள். தனது மனப்பூர்வமான உதவியை வாக்களிக்கும் சமயம் கனம் மந்திரி அவர்கள் நம் சங்கத்தின் சேவையைப் புகழ்ந்து பேசினுர்கள்.

மறு தினம் பர்மா அரசாங்கத்தாரின் மற்றொரு முஸ்லிம் மந்திரி ஊகின் மௌலா (அப்துல் லதீப்கான்) அவர்களை அரசாங்க அலுவலகத்தில் சந்தித்தோம். அவர் எங்களைத் தங்களது வீட்டிற்கு அழைத்துச் சென்றுர்கள். எங்களுக்காக அவர் வீட்டில் ஒரு தேநீர் விருந்துக்கும் ஏற்பாடு செய்திருந்தார். விருந்தில் கனம் மந்திரி அவர்களின் மனைவியும் கலந்து கொண்டார்கள். அம்மையாருக்கு ஆங்கிலமும் தெரிந்திருந்ததால் தலைவரின் சம்பாஷணையிலிருந்து எங்களது தூதுகோஷ்டியின் நோக்கத்தை விளங்கிக் கொண்டார்கள். நோக்கத்திற்கு ஆழ்ந்த அபிமானத்தைக் காட்டி அதற்குப் போதிய

ஆதரவு கொடுக்க தங்களது கண வரைத் தூண்டினார்கள். இம் மனப்பான்மையைக் கண்டு நாங் கள் மகிழ்ந்தோம். எங்களுக்கு ஆதரவு கிடைக்குமா என்று திகைத்தது போய், நினையாபுறத் திலிருந்து ஆதரவு எங்களைத் தேடி வருவதைக் கண்டு நாங்கள் பரவசமுற்றோம்.

இரும்பு வியாபாரிகள் தாங் களே எங்களுக்காக நிதி வசூல் செய்ய பொறுப்பு ஏற்றுக்கொண் டது போன்று மறு தினம் எங் களைச் சந்தித்த மேற்கு இரங் கூனில் வர்த்தகம் செய்யும் முஸ் லிம் மர வியாபாரிகளும் தங்க ளது சங்கத்தின் சார்பில் எங் கள் தூது கோஷ்டிக்காக வசூல் செய்ய ஏற்றுக்கொண்டனர். ஆனால் வசூல் வேலை ஆரம்பிப் பதற்கு முன்பு தலைவரும் நாங் களும் அவர்கள் ஏற்பாடு செய் யும் பொதுக்கூட்டத்தில் பிரசங் கம் செய்ய வேண்டிக் கொண் டார்கள்.

(தொடரும்)

## செல்வத்திற் சிறந்த அறிவு

ஒரு சமயம், இஸ்லாத்தின் நான்காவது கலீபாவான ஹஜ்ரத் அலீ அவர்களிடம் ஒன்பது பேர் வந்து "செல்வத்தை விட அறிவு எப்படிச் சிறந்தது" என்பதற்குத் தனித்தனியே பதி லளிக்குமாறு வேண்டினார்கள். ஹஜ்ரத் அலீ அவர்கள் உடனே கூறினார்கள்.

**செல்வத்தைவிட அறிவே சிறந்தது. ஏனெனில்,**

(1) அறிவு தீர்க்க தரிசிகள் பாரம்பரியம். ஆனால் செல்வமோ பிர்அவ்ன்களின் (பாரோக்களின்) சொத்து. (2) நீங்கள் செல் வத்தைக் காக்கிறீர்கள். அறிவோ உங்களைக் காக்கிறது. (3) செல்வந்தர்களுக்கு விரோதிகள் அதிகம், அறிஞர்களுக்கு அன் பர்கள் அதிகம். (4) கொடுக்கக் கொடுக்கப் பெருகுவது அறிவு, குறைவது செல்வம். (5) பொதுவாக செல்வந்தன் கருமியாகி றன், கற்றறிந்தவனே எப்பொழுதும் தாராளத் தன்மையுடையவ னாக இருக்கிறன். (6) செல்வத்தைப் போன்று, அறிவைத் திரு டர்களால் கவர முடியாது. (7) மறுமை நாளில் செல்வத்தைப் பற்றி கேள்வி கணக்கு உண்டு. அறிவைப் பற்றி அத்தகைய கேள்வி கேட்கப்படமாட்டாது. (8) செல்வத்தைப் போலன்றி காலத்தால் கறை படியாதது அறிவு. (9) பூரண அறிவு பெற் றிருந்த பெருமானார் "இறைவனே! உன்னுடைய ஊழியர்களைப் போல நாங்கள் உன்னை வணங்குகிறோம்." எனக் கூறினார்கள். ஆனால் பிர்அவ்னே தன்னுடைய செல்வச் செருக்கினால் தானே இறைவன் என்று கூறி அழிந்தான்

குறிப்பு: இவ்வாறே பத்துப் பேர்களுக்கு பத்து விதமான பதில் கூறி யதாகவும் நூற்களில் காணப்படுகிறது.

## 4. இன்பமும் துன்பமும்

சற்றும் எதிர்பாராத வகையில் இரு முஸ்லிம் இளைஞர்கள் அங்கு தோன்றித் தங்களிடம் "சவால்" விடுத்ததைக் கண்டு ரீனுட் மன் னன் திகைத்து நின்றான். அசா தாரணமான உடற்கட்டுடன், ஓர் அரசனை அவனையே இழித் துப் பேசும் அளவுக்கு உள்ளத் திண்மை படைத்தவர்களாய்க் காணப்பட்ட அவ்வாலிபர்களை மிக்க ஜாக்கிரதையாகவே சமா ளிக்க வேண்டுமென ரீனுடுக் குத் தோன்றியது.

எனவே, அவன் தன் குரலை மிருதுவாக்கிக் கொண்டு, மஹ்ஜ பீனுக்கருகில் நின்ற யுவனைப் பார்த்து "அப்பா நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டான்.

"நாங்களா? நாங்கள் முஸ்லிம் கள். எங்கள் பெயர் உனக்குத் தெரியவேண்டுமா? என் பெயர் அஷ்ரப். என்னுடைய இந்த நண்பனின் பெயர் அஹ்மத். இன் னும் வேறென்ன உனக்குத் தெரிந்தாக வேண்டும்?"

இந்த பதிலிலே தொனித்த கர்வம் ரீனுடின் அச்சத்தை அதி கரித்தது.

"நான் யார் என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான் அரசன்.

"பதவியினால் நீ ஒரு கிறிஸ்தவ சிற்றரசன்; ஆனால் உனக்குத் தொழில் வழிப்பறிக் கொள்ளை என்பது பார்க்கும்போதே தெரி கிறது!" என மீண்டும் துடுக்கா கவே பதிலளித்தான் அஷ்ரப்.

இன்னும் நிதான மிழக்காமலே ரீனுட், "உங்கள் இருவரையும் பார்க்கும்போது எனக்கு இரக்க மாக இருக்கிறது. பாவம், உலகம் அறியாத சிறுவர்கள் நீங்கள்! அதனால்தான் ரீனுட் அரசரிடம் எந்த முறையில் பேசவேண்டும் என்று தெரியாமல் பேசுகிறீர்கள். இது என் நாடு. இந்தக் கிழவ னும் பெண்ணும் என் கைதிகள். உங்கள் இளமையை உத்தேசித்து இதுவரை உங்களைப் பேசவிட்டுக் கொண்டிருந்தேன். இல்லையெ னில் உங்களிருவர் சிரங்களும் மணலில் உருண்டிருக்கும். உயிர் பிழைக்க வேண்டுமானல் இப்

பொழுதே ஓடிவிடுங்கள்!'' என்ருன் வாளை உலுக்கிய வண்ணம்.

''ஓ, நீ தாஞ அந்த ரீஞட்! முஸ்லிம்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இடையே ஏற்பட்டுள்ள சமாதான ஒப்பந்த நிபந்தனைகளைத் தகர்த்துக் கொண்டுவரும் உன் பெயர், எங்கள் நாட்டில் நன்கு 'பிரசித்த'மாகி இருக்கிறது. நானும் உன்னை எச்சரிக்கிறேன்! இவ்விருவரும் எங்கள் சமூகத்தவர். வம்பு வேண்டாமென்ருல் இவர்களை விட்டுவிட்டு உங்கள் வழியே நீங்கள் போகலாம். இல்லை யென்ருல் யாருடைய தலைகள் உருளுகின்றன என்பதைப் பார்ப்போம்!'' என்ருன் அஷ்ரப்.

அல் பஸல் தரையில் உட்கார்ந்து புஜத்திலிருந்து இரத்தம் ஓடாதபடி அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தார். அஹ்மத், ஹென்ரியைக் கவனித்துக் கொண்டு எதற்கும் தயாராக நின்ருன்.

முன்னமேயே தங்களைச் சேர்ந்த மற்றிரு வீரர்களுக்கு நேர்ந்த கதியை நினைத்துப் பார்த்த ஹென்ரிக்கு இன்னும் தங்கள் பாடும் என்னுகுமோ என்ற பயம் ஏற்பட்டது. எப்படியாவது அந்த இடத்தைவிட்டு நகர்ந்து விடுவது தான் நன்மை என்று அவனுக்குத் தோன்றியது. ஆனல் அஷ்ரபின் சொல்லம்புகள் ரீஞடைத் தாக்கவும் அவன் திடீரெனப் பாய்ந்து அஷ்ரபைத் தாக்கினுன். எதிரியின் தாக்குதலை ஒவ்வொரு விநாடியும் எதிர்பார்த்து உஷாராகவே நின்றிருந்த அஷ்ரபுக்கும் அரசனுக்கு மிடையே கடும் வாட் சண்டை ஆரம்பித்தது.

மற்ருெரு புறத்தில் அஹ்மதும் ஹென்ரியும் உக்கிரமான போரில் ஈடு பட்டிருந்தனர்.

மஹ்ஜபீன், அஷ்ரபுக்கும் மன்னனுக்கும் இடையே நடந்த சண்டையை விழித்துப் பார்த்துக் கொண்டு நின்ருள். அஷ்ரபின் அச்சமற்ற தன்மையும், அவனுடைய உடல் அமைப்பும், போர்த் திறனும் அவளை அப்படியே கவர்ந்து விட்டன. சண்டையின் முடிவைப் பற்றி அவளுக்குச் சற்றும் சந்தேகம் ஏற்படவில்லை.

கவசம் அணிந்திராவிட்டால் அரசனின் கதி வேறு விதமாக முடிந்திருக்கும். அதோடு அவனுடைய கேடயமும் சேர்ந்து ரீஞடைக் காப்பாற்றிக் கொண்டிருந்தது.

தன் வீச்செல்லாம் வீணுவதைக் கண்டு கோபமடைந்த அஷ்ரப், அரசனின் அடியைத் தடுத்து விட்டு வெட்டியவெட்டு, ரீஞடின் நெற்றியில் விழுந்து ஓர் ஆழ்ந்த காயத்தை உண்டு பண்ணியது. இரும்புத் தொப்பி மாத்திரம் இல்லை எனின் அவனுடைய மண்டையே பிளந்திருக்கும்.

அதற்குமேல் அஷ்ரபுடன் போரிடுவது பிராணுபத்தாய் முடியுமென பயந்த ரீஞட், பரபரப்புடன் ஓடிப் பாய்ந்து குதிரைமேலேறிக்கொண்டு ''ஹென்ரி, வந்து விடு!'' என்று கத்தியவனுய் குதிரையை விரட்டினுன்.

ஓட விட்டால் போதும் என்றிருந்த ஹென்ரியும் தப்பிக் குதிரைமேல் ஏறி அதைத் தட்டி விட்டான்.

அவர்களைத் துரத்திக் கொண்டு பின்னல் ஓடிய அஷ்ரப், அஹ்மத் இருவரையும் அல்பஸல் கூவியழைக்கவே இருவரும் திரும்பி வந்து சேர்ந்தனர்.

வந்ததும் அல்பஸலுக்கு ஸலாம் கூறினர்.

அடுத்தபடியாக அஹ்மத், அருகிலிருந்த நீரூற்றுக்கு ஓடிச் சென்று தன் தலைப்பாகைத் துணியைப் பிரித்து தண்ணீரில் முக்கிக் கொண்டு வந்து அவருடைய காயத்தைத் துடைத்துக் கட்டிவிட்டான்.



அஷ்ரப் தன்னிரு கைகள் நிறைய அள்ளிக்கொண்டு வந்த ஊற்று நீரைப் பருகிய பின் அல்பஸல் சற்று சிரமம் தீர, அஹ்மதின் மடியில் சாய்ந்து கொண்டு அவ்விருவரைப் பற்றிய விவரங்களை விசாரித்துக் கொண்டிருந்தார்.

மெல்ல வீசிய மாருதத்தினுல் சலசலவென ஒலித்த இலைகளுடன் விளையாடிக் கொண்டிருந்த மாலைச் சூரியனின் பொன்னிறக் கதிர்கள், இரவு நெருங்குவதையறிந்து விளக்கேற்றப் போவது போல விரைந்தேறிச் சென்று குன்றின் உச்சியிலிருந்து பிரகாசித்துக் கொண்டிருந்தன.

நாணத்துடன் சற்று தூரத்தில்போய் நின்று அவர்களை நன்றிசொட்டும் நயனங்களுடன் நோக்கிக் கொண்டிருந்த மங்கை நல்லாள் மஹ்ஜபீனை அஷ்ரப் அணுகி, ''தாகத்துக்குக் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவந்து கொடுக்கட்டுமா?'' என்று கேட்டான்.

என்னவோ, தாகம் போன்ற ஓர் உணர்ச்சியைத் தான் அப்பொழுது அவள் அனுபவித்துக் கொண்டிருந்தாள்.

''வேண்டாம்!'' என்று சொல்லி விட்டு, வேறு ஏதோ கூற முயன்று, முடியாமல் தவித்தாள்.

தலை குனிந்த வண்ணம் நின்ற மஹ்ஜபீனை அஷ்ரப் அப்பொழுது தான் கூர்ந்து கவனித்தான். தேனில் விழுந்த ஈ போல அவன் சற்று நேரம் திக்குமுக்காடிப் போனுன். எனினும் சமாளித்துக் கொண்டு, ''வேறு என்னவோ சொல்ல வாயெடுத்தீர்களே! எதுவானுலும் வெட்கப்படாமல் சொல்லுங்கள்'' என்ருன்.

அவன் பேச்சினுல் சற்று தைரியமடைந்த மஹ்ஜபீன், ''நீங்கள் இவ்வளவு தீரமாகப் போராடி எங்களைக் காப்பாற்றியதற்கு உங்களுக்கு எவ்விதம் நன்றி செலுத்துவது எனத் தெரியவில்லை!'' என்று தட்டுத் தடுமாறிப் பேசி முடித்தாள்.

அஷ்ரபுக்கு மஹ்ஜபீனின் வார்த்தை ஒவ்வொன்றும் ஒரு இன்பத் தேன் துளியாகத் தோன்றியது. அவளுடைய பேச்சை இன்னும் கேட்க வேண்டும்; கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும் போல இருந்தது அவனுக்கு.

''எங்களுடைய கடமையைச் செய்தோம். அதற்காக நன்றி கூறவேண்டிய அவசியம் என்ன!'' என்று சொன்ன அஷ்ரப், தொடர்ந்து, ''உங்களைப் பற்றி நான் ஒன்றும் தெரிந்துகொள்ளவில்லையே! உட்கார்ந்து விவரங்களைச் சொல்லுங்கள்!'' என்று கூறிக் கொண்டு மணலில் உட்கார்ந்தான்.

சற்று நகர்ந்து தரையில் அமர்ந்த மஹ்ஜபீன் சுருக்கமாகத் தங்கள் வரலாற்றைச் சொன்னாள்.

அதற்கு மேல் அஷ்ரப் பேசிய திலிருந்து, அவ்விருவரும் திமிஷ்கிலிருந்து ஹஜ்ஜுக்குப் புறப்பட்டுச் சென்று கொண்டிருந்த ஒரு ''காபிலா'' (கூட்டம்) வைச் சேர்ந்தவர்கள் எனவும், அவர்கள் குன்றுகளுக்கப்பால் சற்று தூரத்திலுள்ள ஒரு மைதானத்தில் அன்று மாலை வந்து இறங்கியிருப்பதாகவும், மிக நெருங்கிய நண்பர்களான அஷ்ரபும், அஹ்மதும் பொழுது போக்காக அப்பக்கம் சுற்றி வரும்போதுதான் அவ்வுடைய அபயக்குரலைக் கேட்டு அவர்கள் ஓடி வந்ததாயும் மஹ்ஜபீன் அறிந்தாள்.

மற்றொரு புறத்தில் உட்கார்ந்து உரையாடிக் கொண்டிருந்த அல் பஸலுக்கும் அஹ்மதுக்கும் மிடையேயும் இதே தோரணையில் தான் சம்பாஷணை நிகழ்ந்து கொண்டிருந்தது.

களைப்பு நீங்கிய கிழவர் எழுந்து கொண்டே, ''ரீனுட் போய் ஆட்களை அழைத்துக் கொண்டு திரும்பும் முன்பாக நாம் இந்த இடத்தை விட்டு அகல வேண்டும்; இருட்டும் நேரமாகிவிட்டது'' என்றார்.

அது வரை அடித்துக் கொண்டிருந்த காற்றும் நின்று விட்டதால் எங்கும் நிசப்தம் நிலவியது.

அல் பஸல் எழுந்ததைக் கண்டவுடன் அஷ்ரபும் மஹ்ஜபீனும் எழுந்து அவரிருந்த இடத்துக்குப் புறப்பட்டார்கள்.

''சண்டையில் உங்களுக்கு காயம் எதுவும் படவில்லையே,'' என்று மஹ்ஜபீன் கேட்டுக் கொண்டு நடந்து வந்தாள்.

''இல்லை. ஆனால் அதற்கு அப்புறம் தான் பட்டது!'' என்றான் அஷ்ரப்.

அப்புறம் எப்படி ஏற்பட்டிருக்கக் கூடுமென்று மஹ்ஜபீனுக்குப் புரியவில்லை. அதற்குள்ளாக அவர்கள் அல்பஸல் நின்றிருந்த இடத்தை அடைந்து விட்டதால் மஹ்ஜபீன் அதுபற்றி அவனைக் கேட்க முடியவில்லை.

கீழே விழுந்து கிடந்த ரீனுடின் மெய்க்காவலர்கள் இருவருடைய குதிரைகளையும் பற்றிக் கொண்டு வந்து அஷ்ரபும் அஹ்மதும் அவற்றின் மீது ஏறிக் கொண்டனர். அல்பஸலும் மஹ்ஜபீனும் தங்கள் புரவிகளின்மீது ஏறவும் நால்வரும் சிறிது நேரத்தில் குன்றுகளைக் கடந்து மறைந்தனர்.

அதே சமயத்தில் சூரியனும் மேலைக் குன்றுகளின் பின்னே மறைந்தான்.

அப்பொழுது தான் இருபத்தைந்து குதிரை வீரர்களை அழைத்துக் கொண்டு தோப்புக்கு வந்து சேர்ந்த ரீனுட், அல் பஸல் முதலியோரை அங்கு காணமல், ''பேடிகள், பயந்து ஓடிவிட்டார்கள்!'' என்றான் பல்லை நற நற வெனக் கடித்தவாறு.

அவர்கள் சென்ற இடத்தைக் கண்டு பிடித்து வரும்படி சுமார் இருபது வீரர்களைப் பல திக்கிலும் அனுப்பிவிட்டு கீழே விழுந்து கிடந்த வீரர்களைத் தூக்கிச் செல்லும்படி மற்றவர்களுக்கு உத்திரவிட்ட பின் ரீனுட் திரும்பிச் சென்றான்.

* * *

மலையடிவாரத்திலிருந்த அந்த மைதானத்தில் நெடுகிலும் கூடாரங்கள் அடிக்கப்பட்டிருந்தன. மக்ரிபுத் தொழுகை முடிந்தவுடன் நான்கு, ஐந்து, பத்து பேராக நெடுகிலும் அமர்ந்து ஜனங்கள் உணவருந்திக் கொண்டிருந்தனர்.

ஹஜ்ஜுக்குப் புறப்பட்ட அந்தக் கூட்டத்தில் வயது முதிர்ந்தவர்களே அதிகமாகக் காணப்பட்டார்கள். அக்கூட்டத்திலிருந்த இளைஞர்களின் எண்ணிக்கை சுமார் எழுபது இருக்கலாம். மற்றையோர் யாவரும் பெண்களும் குழந்தைகளுமே.

அஷ்ரப். மற்ற மூவரோடும் தன் கூடாரத்தை அடைந்த போது அங்கு யாருமே சாப்பிடாமல் அவனையும் அஹ்மதையும் எதிர்பார்த்திருந்தனர்.

அல்பஸலை அஷ்ரப் தன் தந்தை மன்ஸூருக்கு அறிமுகம் செய்து வைத்தான். மஹ்ஜபீன் கூடாரத்தினுள் பெண்களிருந்த பகுதிக்கு அனுப்பப்பட்டாள்.

திமிஷ்கு நகரத்தின் செல்வாக்கு வாய்ந்த வர்த்தகர்களுள் ஒருவரான மன்ஸூர், திப்ரிய்யா நகரின் பழமையான பெரிய வியாபாரிகளில் ஒருவரான அல் பஸலைப் பற்றி முன்னமேயே கேள்வியுற்றிருந்தார். அல் பஸலும் மன்ஸூரைப் பற்றி அதே விதமாகத் தெரிந்திருந்தாராதலால் இருவரும் மிக்க மகிழ்வுடன் ஆலிங்கனம் செய்து கொண்டனர்.

உள்ளே சென்ற மஹ்ஜபீனை அஷ்ரபின் தாயான ஜுபைதாவும், அவனுடைய தங்கை ஆயிஷாவும் மிக்க கனிவாய் வரவேற்று தழுவிக்கொண்டனர். மஹ்ஜபீன் தன் வாழ்க்கையிலே அது வரை அனுபவித்திராத ஒரு புதுமையான இன்ப உணர்ச்சியுடன் அவர்களுடைய அன்பு வெள்ளத்திலே மிதந்து கொண்டிருந்தாள்.

ஆயிஷா தான் தனக்கு ஒரு தோழி கிடைத்து விட்டாள் என்ற எண்ணத்தினால் தலை கால் தெரியாமல் குதித்துக் கொண்டிருந்தாள்.

ஆயிஷாவுக்கு வயது பதினைந்கு இருக்கும்.

களங்கமற்ற அவளுடைய அழகிய குழந்தை வதனத்தைப் போன்றே அவளுடைய மனதும் நிர்மலமாக இருந்தது. கள்ளங்கபடம் எதுவுமின்றி மனதில் தோன்றியதை யெல்லாம் அப்படியே பேசி விடுவாள்.

ஆயிஷாவும் மஹ்ஜபீனும் சற்று நேரத்துக்குள்ளாகவே ஆண்டாண்டு காலம் அறிந்தவர்கள் போல நேசம் கொண்டு விட்டனர்.

பக்கத்து கூடாரங்களில் இருந்த பெண்களெல்லோரும் வந்து மஹ்ஜபீனுடைய அழகைக் கண்டு வியந்து, அவளுடைய சோகக் கதையைக் கேட்டு அனுதாபப் பட்டு, திரும்பினர்கள்.

படுக்கச் செல்லுமுன்பு, காரியமாகவோ அல்லது வேண்டுமென்றோ, தன் தாயிடம் பேசுவதற்காக கூடாரத்தினுள் வந்த அஷ்ரபைப் பார்த்து, ஆயிஷா, ''அண்ணு, உனக்கு ஒரு சந்தோஷ சமாசாரம் சொல்லுகிறேன்; எனக்கு என்ன தருவாய்?'' என்று கேட்டாள்.

''என்ன சமாசாரம் சொல்லு! நீ சொல்லுகிறபடி இருந்தால் நீ கேட்பதைக் கொடுக்கிறேன்.''

''அப்புறம் இல்லை என்று சொல்ல மாட்டாயே? ஒரு சேர் ஹல்வா கொடுத்தால் போதும்!''

''இதுதானு பெரிசு? அம்மாவிடம் சொல்லி தயார் பண்ணிக் கொடுக்கச் சொல்லுகிறேன். சரி,

விஷயத்தைச் சொல்லேன்!''

''எனக்கு ஒரு அண்ணி பார்த்து வைத்திருக்கிறேன்!''

''அது யார்?'' என்று தன்னை யறியாமல் கேட்டு விட்ட அவனுடைய கண்கள் தாமாகவே மஹ்ஜபீன் பக்கம் பார்த்தன.

''அதோ பார்!'' என்று ஆயிஷா, மஹ்ஜபீனைச் சுட்டிக் காட்டிக் கொண்டு சந்தோஷம் பொங்க, கைகளைக் கொட்டிக் கொண்டு ஆரவாரித்தாள்.

மஹ்ஜபீன் நாணித் தலை கவிழ்ந்தாள்.

அஷ்ரபின் முகத்திலே பொய்க் கோபத்துக்குப் பின்னல் மகிழ்ச்சி மறைந்திருப்பது தெள்ளத் தெரிந்தது.

ஜுபைதாவும் சிரித்துக் கொண்டு, ''ஆயிஷா, சட்டுப் புட்டென்று இம்மாதிரி எதுவும் பேசக்கூடாது!'' என்று கண்டித்தாள்.

ஆயினும் ஆயிஷா அதைக் கவனியாமல், எழுந்து வெளியிற் சென்ற அஷ்ரபைப் பார்த்து, ''என்ன அண்ணு, ஹல்வா சேதி பேசாமல் போகிருய்?'' என்ருள்.

''நீ இப்பொழுது பேசாமல் இரு. காலையில் நான் உனக்குப் பண்ணித்தருகிறேன், இன்ஷா அல்லாஹ்!'' என்ருள் ஜுபைதா.

''இப்படி என்னைப் பார், அண்ணி!'' என்று சொல்லி, குனிந்திருந்த மஹ்ஜபீனின் முகத்தைப் பிடித்துத் தூக்கிய ஆயிஷாவின்மீது கோபப் படுவது போலத் தலையை அசைத்துக் கொண்டு மஹ்ஜபீன் ஆயிஷாவின் கையை நிமிண்டி விட்டாள்.

கூடாரத்தை விட்டு சற்றுத் தொலைவில் அஷ்ரபும் அஹ்மதும் படுத்திருந்தனர்.

படுத்து வெகு நேரமாகியும் அஷ்ரபுக்குத் தூக்கம் வரவில்லை.

பின்நிலாக் காலத்தில் சந்திரன் நன்கு உயர்ந்து வந்த பிறகும் கூட தூங்காமல் கிடந்து புரண்டு கொண்டிருந்தான் அவன்.

அருகில் படுத்திருந்த அஹ்மதும் அஷ்ரபின் மன நிலையை நன்கு அறிந்திருந்தான். அவனுக்கும் தூக்கம் பிடிக்கவில்லை. அஷ்ரப் தானேமுதலில் கூப்பிடட்டும் என்று எண்ணித் தூங்குவது போலப் பாசாங்கு செய்து கொண்டிருந்தான்.

தான் நித்திரையிழந்து தவிக்கும்போது தன் உயிர்த் தோழன் மாத்திரம் சுகமாகத் தூங்குவதைக் கண்டு அஷ்ரபுக்குக் கோபம் வந்தது.

வெகு நேரத்திற்குப் பின் அவன், மெல்ல, '',ஆமூ!'' என்று கூப்பிட்டுப் பார்த்தான்.

மீண்டும் மூன்று நான்கு தரம் கூப்பிட்ட பின்பே அஹ்மத் பதிலளித்தான்.

''உனக்கு எப்படி உறக்கம் வரும்? நீ தான் இன்று பெருங் கடலில் விழுந்து தத்தளித்துக் கொண்டிருக்கிருயே! இனிமேல் நீ எங்கேயோ, 'ஆமூ' எங்கேயோ'' என்ருன் அஹ்மத்.

''நான் என்ன செய்வேன் ஆமூ? எவ்வளவோ முயன்றும் என் மனம் ஒரு நிலைப்படவில்லையே!''

''பயப்படாதே அஷ்ரப்! நான் கிழவரிடம் பேசிக்கொண்டிருந்தேன். அவர் தம் மகளுடைய கலியாணம் பற்றிய சிந்தையாயாகவே இருக்கிருர். உன்னைப் பற்றி வெகு அக்கரையாக விசாரித்துக் கொண்டிருந்தார். வெகு சுலபமாகக் கலியாணத்துக்குச் சம்மதித்து விடுவார்!'' என்று அஹ்மத் ஆறுதல் கூறினுன்.

நேரம் கழிவது தெரியாமல் இருவரும் பேசிக் கொண்டே படுத்திருந்தனர்.

இவ்விருவரையும் தவிர மற்ற எல்லோரும் நன்கு உறங்கிக் கொண்டிருந்தார்கள், எங்கும் ஒரு பயங்கரமான அமைதி பரவி இருந்தது. இடையிடையே அந்த அமைதியைக் கலைத்துக் கொண்டு நரிகளிடும் ஊளைச் சத்தம் மட்டும் அவ்விரவை இன்னும் பயங்கரமாக்கிக் கொண்டிருந்தது.

''அஷ்ரப், தூக்கம் வந்து விட்டது. நான் தூங்கட்டுமா?'' என்று கேட்டான் அஹ்மத்.

இன்னும் தூக்க மின்றி இன்னல் பட்டுக் கொண்டிருந்த அஷ்ரப், ''சரி, நீ தூங்கு!'' என்ருன்.

சற்று நேரத்திற்குப் பின் அஷ்ரபின் காதுகளில், எங்கோ வெகு தூரத்திலிருந்து ஆயிரக் கணக்கான குதிரைக் குளம்பொலிகள் வந்து எட்டிக் கொண்டிருந்தன. விநாடிகள் கழியக் கழிய சப்தமும் நெருங்கிக் கொண்டே வந்தது.

அஷ்ரபின் சந்தேகம் உறுதிப் பட்டது, உடனே அஹ்மதை எழுப்பினுன்.

''கொள்ளை யடிப்பதற்காக ரீனுட் படைகளைத் திரட்டிக் கொண்டு வருகிருன். எல்லோரையும் எழுப்பிவிட்டுத் தயாராக வேண்டும்!'' என்ருன் அஷ்ரப்.

பின்னிரவு வேளையில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தவர்களை ஒவ்வொருவராக எழுப்பி அவர்களுக்கு விஷயத்தை விளக்குவதிலேயே வெகு நேரம் கழிந்து விட்டது.

இதனிடையே ரீனுட் தன்படைகளுடன் வந்து கூடாரங்களைச் சூழ்ந்து கொண்டான்.

''பெண்கள், குழந்தைகள் என்று ஒருவர் விடாமல் எல்லோரையும் பிடித்துக் கட்டுங்கள். கூடாரங்களைப் பிய்த்தெடுத்து எல்லாச் சாமான்களையும் வாரிக் கொண்டு, அவர்களையும் விரட்டிக் கொண்டு வந்து சேருங்கள்!'' என்று ரீனுட் தன் படை வீரருக்கு உத்திரவிட்டான்.

பிறகு ஹென்ரியை நோக்கி. ''ஹென்ரி, பெண்கள் கூட்டத்தில் மஹ்ஜபீனும் இருக்கிருளா என்று பார்த்து நிச்சயம் பண்ணிக் கொள்!'' என்ருன் அவன்.

இதற்குள் குதிரைகள் மீதேறி விட்ட முஸ்லிம் வாலிபர்களின் கூட்டம், தம் வேலையை ஆரம்பித்த பரங்கிப் படையினரின் மீது விழுந்து தாக்கியது. அஷ்ரபும் அஹ்மதும் முன்னிலையில் இருந்தனர். ஒவ்வொரு முஸ்லிமும் ஆக்ரோஷத்துடன் பாய்ந்து நாலைந்து எதிரிகளை வெட்டி வீழ்த்திக் கொண்டிருந்தான். எங்கும் ஒரே அமளி. பெண்களின் அவலக் குரலும், குழந்தைகளின் அழுகையும் சேர்ந்து வானைப் பிளந்து கொண்டிருந்தன.

அஷ்ரபும் அஹ்மதும் அருகருகே நின்று போரிட்டுக் கொண்டிருந்தார்கள்.

எண்ணிக்கையிலே பன்மடங்கு பெருத்திருந்த எதிரிகளின் தாக்குதலைச் சமாளிப்பது மிகவும் சிரமமாக இருந்தது. நேரமாக ஆக தம் பலம் குன்றிவருவதை அவர்கள் உணர்ந்தார்கள்.

இந்த நிலைமையில்தான் அஹ்மதின் நெற்றியில் ஒரு வெட்டு விழுந்தது.

''அஷ்ரப்!'' என்ற சப்தத்துடன் குதிரைமீதிருந்து கீழே விழுந்தான் அஹ்மத்.

உடனே திரும்பிப் பார்த்த அஷ்ரபுக்கு அத்துடன் தன்னுடைய உயிரும் உடலிலிருந்து விடுபடுவது போன்ற ஒரு உணர்ச்சி தோன்றவும் அவன் கையிலிருந்த வாள் நழுவிக் கீழே விழுந்தது.

அவனை நெருங்க அஞ்சிக் கொண்டிருந்த வீரர்கள் இப்பொழுது அவன்மீது கயிற்றை வீசி இறுகக் கட்டி விட்டார்கள்.

இளைஞர்கள் எல்லோரும் சண்டையில் வீழ்ந்து படவும் முஸ்லிம்களின் எதிர்ப்பு ஓய்ந்தது,

தன் படையில் கால் பகுதிக்கு மேல் விழுந்து விட்டதை உணர்ந்ததும் ரீனுடுக்கு வெறி மூண்டது. எல்லோரையும் படுகொலை

செய்ய உத்தரவிட்டான்.

முதியோர், பெண்கள், குழந்தைகள் என்ற வித்தியாசமின்றி நூற்றுக் கணக்கான கைதிகள் உடன் வெட்டி வீழ்த்தப்பட்டனர்.

இடையில் ரீனுடுக்கு மஹ்ஜபீன் நினைவு வரவும், அவன் அப்படுகொலையை நிறுத்தச் செய்து, உயிருடன் எஞ்சியிருந்த கைதிகளை அங்கிருந்து அறுபது மைல் தூரத்திலிருந்த அவனுடைய தலை நகரமான கரக் பட்டணத்துக்கு நடத்திக் கொண்டுபோய் சேர்க்கும்படி உத்தரவு பிறப்பித்து விட்டு, பெரிய யுத்தத்தில் வெற்றி கண்டு திரும்புபவன் போல பேரிகைகள் முழங்க முன்னே சென்றான். அவனைத் தொடர்ந்து அவனுடைய படை வீரர்களும் தம் கைதிகளுடனும் கொள்ளைப் பொருள்களுடனும் புறப்பட்டுச் சென்றனர்.

முன்னிரவிலே மகிழ்ச்சி ததும்பிக் கொண்டிருந்த அந்த மைதானம் பின்னிரவு கழிந்து பொழுது புலருமுன் ஓரே பிணக் காடாக மாறி விட்டிருந்தது.

(தொடரும்)



# இரத்த தானம்

**"ஜமீல்"**

மதுரை ஆஸ்பத்திரியில் மீண்டும் ஒன்று சேர்ந்த குடும்பம் மேலப்பாளையத்துக்குத் திரும்பி வந்து இப்பொழுது ஆறு மாதமாகி விட்டது.

இப்ராஹீம், தாம் இவ்வளவு காலமாகச் சேர்த்து வைத்திருந்த வாஞ்சையையும் செல்வத்தையும் தன் பேரக் குழந்தைகளின் மீது வாரிச் சொரிந்து கொண்டிருந்தார். சிறு குழந்தைகளான பஷீரையும் பல்கீஸையும் விட மைமூனிடம் தான் உயிராக இருந்தார்.

பருவ அழகு உடலெல்லாம் பூரிக்க இணையற்ற வனப்புடன் விளங்கிய தம் பேத்தியைக் காணும் தோறும் அவர் மனம் இறும்பூது எய்தும்.

ஏழெட்டு மாதங்களுக்கு முன்பு அருப்புக்கோட்டையில் பசி, பட்டினியால் வெளுத்து மெலிந்திருந்த மைமூனைப் பார்த்தவர்கள் இப்பொழுது அவளை அடையாளம் கண்டு கொள்வது மிகவும் கடினம்; அந்த அளவுக்கு அவள் வளர்ந்தும் பருத்தும் இருந்தாள். எங்கே யாருடைய கண்ணும் பட்டுவிடப் போகிறதோ என்று பயந்து கொண்டிருந்தார் அவளுடைய பாட்டனார்.

தன்னிடம் அவ்வளவு பரிவு காட்டிய "பெத்தாப்பா" விடம் மைமூனும் அதிக அன்பு செலுத்தி வந்தாள். பெரியவருக்கு வேண்டிய பணிவிடைகள் அத்தனையும் அவளே செய்வாள்.

"என் கண்மணிக்கு நல்ல கண் நிறைஞ்ச மாப்பிள்ளையைப் பார்த்துக் கட்டி வச்சதுக்கு அப்புறம் எனக்கு மவுத்து வந்தா கவலையில்லை" என்று அடிக்கடி பெரியவர் சொல்லிக் கொள்ளுவார்.

மைமூனின் அழகுக்காகவும் கிழவரின் சொத்துக்காகவும் ஆசைப்பட்டு எத்தனையோ பணக்காரர்கள் வீட்டிலிருந்து பெண் கேட்டு வந்தாலும் அந்தப் "பையன்கள்" யாரையுமே பெரியவருக்குப் பிடிக்கவில்லை.

∴ ∴ ∴

"பற்சொத்தை" என்பது என்னவோ சாதாரண நோயாகத் தான் தோன்றுகிறது. ஆனால் சில சமயங்களில் ஈறு அழுகிப் போய், இரத்தம் விஷங்கொண்டு, நிற்காமல் கசிய ஆரம்பித்து உயிருக்கே ஆபத்தாக முடிவதுண்டு.

அந்த மாதிரிக் "கேசு"களில் ஒன்றாகத்தான் மஹ்மூது மதுரை எர்ஸ்கின் ஆஸ்பத்திரியின் ஸ்பெஷல் வார்டு ஒன்றில் கொண்டு வந்து சேர்க்கப் பட்டான்.

அருப்புக் கோட்டையில் பிரபல லுங்கி ஏற்றுமதியாளராகத் தொழில் செய்த அஹ்மது மீராவின் ஒரே மகன் மஹ்மூது. அவருக்கு சென்னையிலும் கல்கத்தாவிலும் இரங்கூனிலும் கடைகள் இருந்தன. கைத்தறித் துணி வியாபாரம் பாதிக்கப்பட்ட நிலைமையிலும் கூட யுத்த காலத்தில் தேடி ஸ்திரப் படுத்தி வைத்துக் கொண்டிருந்த அவருடைய சொத்து தலை முறை தலை முறையாக வைத்து அனுபவிக்கப் போதுமானதாக இருந்தது, கார் ஒன்றும் வைத்திருந்தார்.

மஹ்மூது தொழிலில் தன் தந்தைக்கு வலது கரமாக விளங்கினான். அடிக்கடி சென்னைக்கும், கல்கத்தாவுக்கும் போவதும் வருவதுமாக வியாபாரத்தைத் திறம்பட நடத்தி வந்தான். கறுத்த மேனி யுடையவனாக இருந்தாலும் அவனுடைய நல்ல கவர்ச்சியான முகமும் வாட்ட சாட்டமான உடல் வளர்ச்சியும் பேச்சுத் திறமையும், வர்த்தகத்தில் அவனுக்குப் பெரிதும் அனுகூலமாக இருந்தன.

இப்படிப்பட்டவனுக்கு இரண்டு மூன்று பற்கள் மட்டும் சொத்தையாக இருந்தன. அவன் அதை அலட்சியம் செய்து வந்தான். அந்த அலட்சியத்தினாலோ அல்லது நேரம் வாய்ப்பதில்லை என்பதனாலோ சென்னைக்குச் செல்லும் பொழுதுகூட அவன் தன் பற்களுக்கு வைத்தியம் பண்ணிக் கொள்வதில்லை.

ஒரு நாள் திடீரெனப் பல்லிலிருந்து கசிய ஆரம்பித்த இரத்தம் சற்றும் நிற்காமல் கசிந்து கொண்டே இருந்தது. என்ன வெல்லாமோ பரிகாரம் செய்தும் நிற்பதாக இல்லை.

ஆரம்பித்து இரண்டு நாட்களாகியும் நிற்காமலிருந்த இரத்தக் கசிவு திடகாத்திரனான அந்த வாலிபனைக் கூடப் படுக்க வைத்துவிட்டது.

கலவரமடைந்த அவனுடைய தாய் தந்தையர் அவனைக் காரில் ஏற்றிக் கொண்டு மதுரைக்கு விரைந்தனர்.

“இந்தக் கேசுக்கு உடனடியாக உடலில் இரத்தம் ஏற்ற வேண்டும். இரத்தக் கசிவை நிறுத்த இஞ்செக்ஷன் செய்ய வேண்டும்” என்றார் பெரிய டாக்டர்.

“இரத்தப் பரீட்சை செய்தாகி விட்டது. இந்த பேஷண்டுடைய இரத்தம் “ஓ” பிரிவைச் சேர்ந்தது. “ஏபி” வர்க்கத்து இரத்தம் செலுத்தப்பட வேண்டும். அந்த இரத்தம் இப்பொழுது “ஸ்டாக்” இல்லை. கிண்டி “பிளட்பாங்கு”க்கு தந்தி கொடுத்தாலும் வந்துசேர இரண்டு நாள் பிடிக்கும். அது வரைக்கும் தாங்காது. பேஷண்டுடைய தந்தையின் ரத்தத்தை எடுக்கச் சொல்கிறார். ஆனால் அவருக்கும் நீரிழிவுநோய் இருக்கிறது. அது அவருக்கே ஆபத்தாகும். ஒன்றும் தோன்ற வில்லை!” என்றார் சின்ன டாக்டர். பெரிய டாக்டர் ஏதோ யோசனையில் இருந்தார்.

ஆறு மாதங்களுக்கு முன்பு சிகிச்சை பெற்றுக் கொண்ட இப்ராஹீமுடைய ‘கேசு’ சின்ன டாக்டரின் ஞாபகத்துக்கு வந்தது. அதே வர்க்கத்தைச் சேர்ந்ததுதான் இப்பொழுது தேவையான இரத்தமும்! ஒரு வேளை இந்த நோயாளியைச் சேர்ந்தவர்கள் அந்தக் குடும்பத்தவர் யாரையாவது அழைத்துவர முடியுமானால், மஹ்மூது உயிர் பிழைக்க முடியும்.

பழைய ரிக்கார்டுகளைப் புரட்டினார் டாக்டர். இப்ராஹீமின் மேலப்பாளையத்து விலாசத்தைக் குறித்துக் கொண்டுவந்து அஹ்மது மீராவிடம் சுருக்கமாக விஷயத்தைச் சொன்னார்.

“மேலப்பாளையத்தில் நம்ம அப்துல் காதர் சின்னப்பா இருக்காங்களே, அவங்க மூலமா அந்த குடும்பத்தினரைப் பாத்து யாரையாச்சும் கூப்பிட்டு வந்திடலாம்!”

இவை மஹ்மூதின் தாய் மரியத்தின் ஆசை நிறைந்த வார்த்தைகள்.

“டாக்டர், நீங்க கவனிச்சுக்குங்க நான் காரில்போய் மத்தியானமே திரும்பிவிடுகிறேன்! என்றார் அஹ்மது மீரா,

“நீங்க இங்கேயே தம்பி கிட்டத்துலே இருங்க நான் போய் சின்னப்பாவைப் பார்த்து வரேன்!” என்று உறுதியாகச் சொன்னாள் அவருடைய மனைவி.

கார் மேலப்பாளையத்தை நோக்கிப்பறந்து, மூன்று மணி நேரத்தில்,அப்துல் காதர் வீட்டு வாசலில் நின்றது.

மரியத்தின் தாயுடன் பிறந்த சின்னம்மாவைத்தான் அப்துல் காதர் கட்டியிருந்தார்.

ஹாஷிமைத் தேடி அருப்புக் கோட்டை சென்ற அப்துல் காதர் அவர்கள் வீட்டில்தான் தங்கியிருந்தார். அப்பொழுதுதான் அஹ்மது மீராவுக்கும், தம்மூரில் நெசவுத் தொழில் செய்துகொண்டிருந்து ஊரை விட்டுச் சென்றுவிட்ட ஹாஷிம் தமக்கு ஒரு வகையில் உறவு என்று தெரிந்தது. ஹாஷிம் பல தடவைகளில் தாம் நெய்த கைலிகளை அஹ்மது மீராவிடம் கொண்டுபோய் விற்றிருக்கிறார்.

மரியத்தை அழைத்துக் கொண்டு தம் அண்ணன் இப்ராஹீம் வீட்டிற்கு விரைந்து சென்ற அப்துல் காதர் தம் மனைவியின் சகோதரி மகளை அக் குடும்பத்துக்கு அறிமுகம் செய்து வைத்தார். வீட்டுக்குள் சென்ற மரியத்தை மைமூன் வரவேற்றாள். சிறிதுநேரப் பேச்சிலேயே மைமூன் மரியத்தின் மனதைக் கவர்ந்துவிட்டாள். மரியத்துக்கு அதற்குமுன் மைமூனைத் தெரியாதிருந்தாலும் மைமூனுக்கு மரியம் யார் என்று நன்கு தெரியும். தெரிந்திருக்கக் காரணமும் இருந்தது.

அருப்புக்கோட்டையில் பலரையும் பற்றி மரியமிடம் விசாரித்துக் கொண்டிருந்தாள் மைமூன்.

மஹ்மூதுடைய நோயைப் பற்றியும் மரியம் வந்த நோக்கம் பற்றியும் தெரிந்ததும் மைமூனுடைய முகம் வாடியது.

“உங்கள் மகனும் நானும் குழந்தைகளாக இருந்தபோது அருப்புக் கோட்டை ‘அசரத்’ இடம் ஒன்றாக ஓதினோம், மாமி” என்றாள் மைமூன்,

“ஆனால் மாமி, வாப்பா நேற்றிலிருந்து சுாயலாக உள்ளே படுத்திருக்காங்களே, எப்படி இரத்தம் கொடுக்க முடியும்?”

மரியத்தின் முகம் திகிலினால் வெளுத்தது.

“அப்போ வேறு வழியில்லையா?” என்றாள்.

“ஏன், இல்லே?” என்று அழுத்தமாகக் கேட்டாள், மைமூன், ஏதோ ஒரு முடிவுக்கு வந்துவிட்டவள் போல.

ஃ ஃ ஃ

மைமூனுக்கு அப்பொழுது ஏழு வயசிருக்கும். அருப்புக்கோட்டை அசரத்தின் பள்ளியில் ஓதிக் கொண்டிருந்தாள்.

ஒரு நாள் காலையில் பள்ளிக்குப் போகும் வழியில் தெருவில் கிடந்த உடைந்த சோடா பாட்டல் துண்டு ஒன்று அவளுடைய காலைப் பதம் பார்த்துவிட்டது. இரத்தம் ஓட ஆரம்பிக்கவும் பயந்துபோய் அழுது கொண்டு அப்படியே தெருவில் உட்கார்ந்து விட்டாள்.

பள்ளிக்குப் போவதற்காக அந்தப் பக்கம் வந்த மஹ்மூது அவளிடம் ஓடிவந்து தன் புதுக் கைக்குட்டையினால் இரத்தத்தைத் துடைத்துவிட்டு அதனாலேயே காயத்தைச் சுற்றி ஒரு கட்டும் கட்டிவிட்டான். அதற்குமேல் காலை ஊன்ற முடியாமல் தவித்த மைமூனைக் கையைப் பிடித்துத் தாங்கிக் கொண்டு வீட்டில் கொண்டு போயும் விட்டு வந்தான்.

அப்போது அவனுக்கு வயது பன்னிரண்டிருக்கும். வயது அவ்வளவு ஆகியும் அவனுக்கு “ஓதுதல்” வரவில்லை. பையன் தான் மக்கு என்று அசரத் சொல்லிக் கொண்டு வந்தார். அசரத்துக்குத் தான் சரியாக ஓதிக் கொடுக்கத் தெரியவில்லை என்று அஹ்மது

மீரா சொல்லிக் கொண்டிருந்தார்.
அவனுடைய மதரஸாப் படிப்
புக்கு ஒரு எதிர்பாராத முடிவும்
வந்தது.

மஹ்மூது மகா விஷமி என்ரு
லும் மைமூனிடம் மட்டும் ஒரு
விதமான பரிவுடன் நடந்து வந்
தான். இது என்னவோ அந்த
அசரத்துக்குப் பிடிக்கவில்லை.

ஸபர் மாதத்தின் கடைசித்
திங்கள் கிழமை. அன்று அசரத்,
தம் தலையை வழுக்க சிரைத்துக்
கொண்டு வந்திருந்தார். அப்படிப்
பட்ட தினங்களில் அசரத்துக்குக்
கோபம் அசாத்தியமாக வரும்.
அம்பட்டனின் மழுங்கல் கத்தி
அவருடைய மண்டையை எரிய
வைத்தால், அதற்குப் பள்ளியில்
ஓத வரும் குழந்தைகளா பொ
றுப்பு? எனினும் யார் மீதாவது
அன்று தம் எரிச்சலைத் தீர்த்துக்
கொள்ளுவார். இதைத் தெரிந்து
வைத்திருந்த குழந்தைகளும்
அன்று வெகு ஜாக்கிரதையாகவே
இருக்கும்.

முன் கோபக்காரரான அசரத்,
கோபம் வந்தால். முதல் வேலை
யாக நெற்றியில் அழுத்திக் குட்டு
வார். அதிலும் பெண் குழந்தை
கள் தலையில் கிடக்கும் தாவணி
சற்று நெற்றிக்கு மேலேறிவிட்
டால் முன்னம் தலையில், மூளை
கலங்க, ஓங்கி ஒரு குட்டு வைப்
பார்.

பல நாட்களுக்குப் பின் அன்று
தான் மைமூன், கால் காயம்
ஆறி, பள்ளிக்கு வந்திருந்தாள்.
அவளைக் கண்டு மஹ்மூதுக்கும்
ஒரே சந்தோஷம்.

தலையாட்டி பொம்மைகள்
போலக் குழந்தைகள் எல்லோ
ரும் வேகமாக, கிதாபுமேல்
குனிந்து விழுவதும் நிமிர்வதுமாக,
முன்னுக்கும் பின்னுக்கும் ஆடிக்
கொண்டு, "அம்ம ஜுஸ்"வின்
ஸூராக்களை கிளிப் பிள்ளைகள்
மாதிரி ஒப்பித்துக் கொண்டிருந்த
ன. ஒரே இரைச்சலாக இருந்தது.

அசரத்தின் முன்னால் ஒரு தடிப்
பிரம்பு கிடந்தது. அசரத், தலைப்
பாகையைக் கழற்றி வைத்து
விட்டு, தம் பாட்டுக்கு ஓலைகளின்
மீது, ஸபர் மாத "மிடிமை" தீர்க்க
ஒடுக்கத்துப் புதன் துஆவை எழு
திக் குவித்துக் கொண்டிருந்தார்.
இடை இடையே அவருடைய
பயங்கரப் பார்வை மாணவ
மாணவிகள் மீது சென்று திரும்பிக்
கொண்டிருந்தது.

தன் புதுக் கைக்குட்டை
யைத் தியாகம் செய்து அன்று
தனக்குதவிய நண்பன் மஹ்மூ
தைத் தன் உடலாட்டத்துக்
கிடையே அடிக்கடி மைமூன்
திரும்பிப் பார்ப்பாள். அப்பார்வை
யிலே நன்றி பொங்கி வழியும்.
மஹ்மூதும் அவளுடைய பார்வை
யில் காணப்பட்ட உணர்ச்சியை,
அவன் வயதுக் கேற்பப் புரிந்தவ
னய், அவளை அடிக்கடி நோக்கி
மகிழ்ந்து கொண்டிருந்தான்.

இந்தக் கண்களின் சந்திப்பைக்
கவனித்து விட்ட அசரத்துக்கு
அது பிடிக்க வில்லை. அந்தக் குழந்
தைகள் பயத்தினால் முதலில்
அசரத்தைப் பார்ப்பதும் பிறகு
தமக்குள் புன்னகை புரிவதுமாக
இருந்ததைக் கடைக் கண்களால்
கவனித்த அசரத்துக்கு அவர்கள்
தம் மொட்டைத் தலையைப்
பார்த்துச் சிரிப்பதாகப் பட்டது.
வெறியுடன் எழுந்த அசரத்
நேராக மைமூனிடம் சென்று
அவள் தலையில் பொட்டென்று
ஒரு குட்டு வைத்து விட்டு,
மீண்டும் வந்து பிரம்பை எடுத்
துக் கொண்டு மஹ்மூதிடம்போய்
பளீர், பளீர் என்று நாலு அடி
கொடுத்துவிட்டுத் தம் இடம்
திரும்பினர். திரும்பிவந்து உட்
கார்ந்த பின்பு தான் அவர்
"நாம் எவ்வளவு தவருன வேலை
செய்துவிட்டோம்" என்று நினைத்
துப் பார்த்தார். அவர் பயந்து
கொண்டிருந்தபடியே அந்த விப
ரீதமான காரியமும் நிகழ்ந்தது.



பையன் காரணமின்றி அடி
பட்டதைக் கேட்ட பணக்கார
ரான அஹ்மது மீரா குடு குடு
வென ஓடிவந்து அசரத்தின் முகத்
தில் ஒரு குத்து விட்டு, அவரைக்
கண்டபடி வைது விட்டுத் திரும்பி
ஞர்.

அடிபட்ட அசரத் "ஸபர் மாதத்
தில் இப்படித்தான் "மிடிமை"
எல்லாம் வரும்" என்று மாதத்
தின் மேல் பழியைப் போட்டு
விட்டு இருந்தார். அதற்குமேல்
எந்தக் குழந்தையையும் அடிப்ப
தில்லை என்ற முடிவுக்கு வந்து
விட்டார்.

அஹ்மது மீரா மறு நாள் தம்
பையனை ஆங்கிலப் படிப்பு
படிக்க ஸ்கூலுக்கு அனுப்பி
வைத்துவிட்டபடியால் அதன்
பிறகு மைமூன் அவனைக் காண
வே இல்லை.

ஃ ஃ ஃ

குழந்தைப் பருவத்தில் நடந்த
அந்த நிகழ்ச்சிகள் எல்லாம் ஒரு
கணத்தில் அவள் மனத்தில்
தோன்றி மறைந்தன.

"ஏன் இல்லை?" என்று சொன்ன
மைமூனின் முகத்தை மரியம்,
ஆவலுடன் பார்த்தாள்.

"வாப்பாவுக்குப் பதிலாக
நானே என் இரத்தத்தைக்
கொடுக்கிறேன்!" என்று மைமூன்
கூறி முடிக்கு முன்பே மரியம்
அவளை அப்படியே தாவி அவ
ளைத் தழுவிக்கொண்டாள். மை
மூனின் தோளில் புதைந்து கிடந்த
இரட்டை நாடிச் சரீரமுள்ள மரி
யத்தின் தலையும் அத்துடன் இரு
காது நிறைய கிடந்த தங்க வாளி
களும் அடிக்கடி குலுங்கிக்
கொண்டிருந்தன.

இப்ராஹீமுடன் வெளிப் புற
மிருந்து பேசிக் கொண்டிருந்த
அப்துல் காதர் ஹாஷிமுடைய
நோயைப் பற்றி அறிந்தவுடன்,
மரியத்தை அழைத்துக் கொண்டு
போவதற்காக உள்ளே நுழைந்த
வர் இந்தக் காட்சியை வியப்
புடன் பார்த்துக் கொண்டு நின்
ருர்.

மைமூனை மதுரைக்கு அனுப்பு
வதற்கும் அவள் இரத்தம்
கொடுப்பதற்கும் இப்ராஹீம்
இலேசில் சம்மதிக்கவில்லை. தம்
பேத்தியின் உடல் நலம் அதனால்
கெட்டுவிடும் என்று அவர் பயந்
தார். கடைசியாக அப்துல் காத
ரும் மிகவும் வற்புறுத்தி, தாமும்
கூடவே சென்று உடனே திரும்பி
வருவதாகச் சொன்ன பிறகு
தான் அரை மனதுடன் சம்மதம்
கொடுத்தார்.

ஃ ஃ ஃ

அதிக இரத்தப் போக்கினால் சுய
உணர்வற்றுக் கிடந்த மஹ்மூதின்
அருகில் மற்ருெரு கட்டிலில்
படுக்க வைக்கப்பட்டிருந்த
மைமூனை நர்ஸ்களும் லேடி
டாக்டரும் பார்த்துப் பார்த்து
மனசுக்குள்ளே புன்னகை புரிந்து
கொண்டனர். ஒரு நர்ஸ் துணிந்து
மெல்ல மரியம் இடம் கேட்டு
விட்டாள், "மைமூனுக்கு மஹ்மூது
என்ன உறவு" என்று. உடனே
மற்ற ஒவ்வொரு நர்ஸிடமும்
லேடி டாக்டரிடமும் போய் குசு
குசுவென்று "பேஷயண்ட் இந்தப்
பெண்ணுக்கு அத்தான் முறை
யாம்" என்று சொல்லிவிட்டு
வந்தாள். அவர்கள் எல்லோரு
டைய மனங்களும் அவ்விருவரை
யும் கற்பனையில் ஜோடி சேர்த்
துப் பார்த்தன.

அருப்புக் கோட்டை அசரத்
என்னவோ அதன் பிறகு அஹ
மது மீராவிடம் நல்ல விதமாகத்
தான் நடந்து வந்தார். மீராவும்,
இயற்கையிலேயே மிகுந்த மதப்
பற்று உடையவராதலால் நடந்த
தற்குவருந்தி பிறகு அவரிடம் மன்
னிப்புக் கேட்டுக் கொண்டார்.
அதற்குப் பரிகாரம் செய்பவர்
போல அசரத்துக்கு முன்னைவிட
அதிக மரியாதை காட்டிவந்தார்.

தமது பழைய மாணவனும்
மாணவியுமான மஹ்முதுக்கும்

மைமூனுக்கும் கல்யாணம் நிச்சயமாகி இருக்கிறது என்று கேள்வியுற்றதும், அசரத்துக்கு முன்பு நிகழ்ந்த சம்பவங்கள் நினைவுக்கு வந்தன. மைமூனின் இரத்த தானம் பெற்று மஹ்மூது பிழைத்தெழுந்தது பற்றியும் அவர் கேள்விப்பட்டிருந்தார்.

அவர் மனசின் ஏதோ ஒரு மூலையில் குயுக்தியான ஒரு வாதம் உதித்தது. அவ்விருவர் மேலும் அவருக்குஏற்பட்டிருந்த அசூயையோ அல்லது அவருடைய மத பக்தியோ ஏதோ ஒன்று அவரை உடன் மீராவிடம் உந்திச் சென்றது.

"மைமூனின் இரத்தம் மஹ்மூதின் உடலில் ஏறியிருப்பதால் இருவரின் உடலிலும் ஒரே இரத்தம் ஓடுகிறது. அப்படியானால் இருவருக்குமிடையே சகோதர சகோதரி முறை ஏற்பட்டுவிடுகிறது. ஆகவே இத் திருமணம் கூடாதே," என்றார் நம் நாட்டு மௌலவீ!




சற்றும் எதிர் பாராத இந்தத் தடையுத்தரவு மீராவின் மனதை இடிபோலத் தாக்கிற்று. மூளை குழம்பியது. சற்று தாமதித்து பின் "சரி யோசனை செய்வோம்!" என்று சொல்லி அசரத்தை அனுப்பிவிட்டு காரிலேறி மேலப் பாளையம் போய்ச் சேர்ந்தார்.

⁂ ⁂ ⁂

அப்துல் காதரின் யோசனைப் படி இருவரும் அன்றிரவே சென்னைக்குப் புறப்பட்டனர்.

சென்னை முப்தி இனயத்துல்லா ஸாஹிப் "நாட்டு மௌலவீ" யின் வாதத்தைச் சொல்லக் கேட்டு புன்னகை புரிந்தார்.

தமது "பத்வா"வை எழுதிக் கொண்டிருந்த அம்முதியவரின் முகத்தை, அவர் என்ன எழுதுகிறாரோ என்ற அச்சத்துடன் பார்த்துக் கொண்டு அவ்விருவரும் அமர்ந்திருந்தனர்.

தும்பைப்பூ போன்று நன்கு வெளுத்திருந்த அவருடைய தாடியும், தூய வெள்ளை மஸ்லின் தலைப்பாகைக்குக் கீழே நெற்றியில் தோன்றிய தொழுகை வடுவும், அரபி போன்ற நிறமும், எல்லா வற்றிற்கும் மேலாக அவருடைய முகத்தில் காணப்பட்ட அமைதி நிறைந்த தெய்வீகமான ஒரு களையும் அவர்களுக்கு அவர் பால் பெருமதிப்பு ஏற்படச் செய்தன.

"......எனக்குத் தெரிந்த வரையில் குர்ஆன் ஷரீபிலோ, ஹதீதிலோ இவ்விதமானவர்களுக்கிடையே விவாகம் செய்துகொள்ளுவதற்குத் தடை ஏற்படுத்தக் கூடிய எந்த விஷயமும்காணப் படாததால் இப்படிப் பட்ட விவாகம் அனுமதிக்கப்படலாகும் என்று நான் தீர்ப்புக் கூறுகிறேன். "வல்லாஹு அஃலமு பிஸ்ஸவாபி"

மார்க்கத் தீர்ப்பைப் பெற்ற மீராவின் கண்கள் இறைவனிடம் ஏற்பட்ட நன்றி யுணர்ச்சியால் நனைந்தன. பெரியவரின் கைகளை முத்தமிட்டுக் கொண்டு, விடை பெற்று இருவரும் வெளியேறினர்.

மேலப்பாளையத்தில் வெகு விமரிசையாக நடந்தேறிய மஹ்மூது—மைமூன் திருமணத்துக்கு அருப்புக்கோட்டை அசரத்தும் வந்து தானிருந்தார்.

⁂ ⁂ ⁂

முதல் சந்திப்பின் போதே மைமூன், மஹ்மூதிடம், "நீங்கள் ஒரு தடவை என் காலில் விழுந்தீர்களே, ஞாபகம் இருக்கிறதா?" என்று கேட்டாள்.

மஹ்மூது விழித்தான். "அது எப்போ?" என்று கேட்டான்.

"அதுதான், என் காலில் கண்ணாடித் துண்டு கிழித்து இரத்தம் வந்தபோது, என் காலைப் பிடித்து இரத்தத்தைத் துடைத்து விட்டு கட்டுப் போட்டீர்களே நினைவில்லையா?"

"ஆம், அன்று இரத்தம் ஓட விடாமல் தடுத்ததனால் தானே பிறகு அது எனக்கே பிரயோஜனப் பட்டது? ஆனால் நான் வந்து உன் காலில் விழுந்தேனா, மூஞ்சியைப் பார்!" என்றான் மஹ்மூது, அவள் கன்னத்தைக் கிள்ளிய வண்ணம்.

மைமூன் திரும்பிக் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தாள். நாணத்தினால் இரத்தம் ஏறி அவள் முகம் குபீரென்று சிவந்தது. கன்னத்தைத் தடவிக் கொண்டே "நீங்கள் கிள்ளியதனால் இரத்தம் வந்துவிட்டதே!" என்றாள், அவள்.

"போனால் போகிறது. அதற்காக வேண்டுமானால் ஐந்து ரூபாய் வாங்கிக்கொள்" என்றான் மஹ்மூது.

இருவரும் கலகலவெனச் சிரித்தார்கள். ★

# உணர்வு கொள்வீர்

(ஏ. எஸ். அர்ஸலான்)

(வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் உலகுக்கே வழி காட்டிகளாய் இருந்தனர் நம் மூதாதையர். ஆனால் நாம் இன்று பின்னடைந்த சமுதாயத்தினராய், இஸ்லாமிய வாழ்க்கை வழியை மறந்தவர்களாய் இருக்கிறோம். இதற்கு என்ன காரணம்? இதைத்தான் அல்லாமா இக்பால் (ரஹ்) தமக்கே உரிய கம்பீர நடையில்விளக்குகிறார்கள்.)

**"அவர்கள் முஸ்லிம்களாய் வாழ்ந்தனர்; சீரும் சிறப்பும் பெற்றனர். நீங்களோ, குர் ஆனைப் புறக்கணித்தீர்கள்; தாழ்வுற்றுப் போய்ச் சீரழிந்தீர்கள். உச்சி முதல் உள்ளங் கால் வரையில் நீங்கள் வெட்டிப் பேச்சுக்காரர்களாய் இருக்கின்றீர்கள். அவர்களோ, முற்றும் செயல் வீரர்களாய்த் திகழ்ந்தனர். ஆகவேதான் நீங்கள் ஒரு மலர் மொட்டுக்காகத் தவிக்கும்போது, எழில் மிகுந்த பூங்காவனமே அவர்கள் கையில் இருந்தது.**

**"நீங்கள் ஒருவருக்கொருவர் சினங்கொண்டு பிணங்கியவர்களாய் வாழ்கிறீர்கள்; ஆனால் அவர்கள் மிக்க அன்புடன் ஒருவருக்கொருவர் உதவி வாழ்ந்தனர். குற்றம் புரிவதும், பிறர் குற்றங்களைத் துருவிப் பார்ப்பதும் உங்கள் குணமாகிப் போய்விட்டது. ஆனால் உங்கள் மூதாதையர் பிறர் குற்றங்களை மறைத்துக் காத்தனர்; கருணையோடு நடந்து கொண்டனர். உங்கள் உள்ளங்களில் அன்பு சுடர்விட்டுப் பிரகாசிக்கவில்லை; ஆத்மாக்களில் நீங்கள் பெறும் அருளுக்கு நன்றி உணர்வு பொங்கி எழவில்லை, நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் போதனைகளுக்கும் உங்களுக்கும் ஒரு விதத் தொடர்பும் இல்லை."**

(ஆகையால் நாம் வீழ்ச்சியுற்றோம், நிர்க்கதியானோம்; பார்ப்பவர்களின் ஏளனத்திற்கு ஆளானோம். நம்முடைய வீழ்ச்சி எத்தகையது என்றும் அதன் காரணங்கள் எவை என்றும் தெரிந்து கொண்டோம். வருந்திப் பயனில்லை. திருந்த முயற்சிக்கவேண்டும். திருந்த முடியாத அளவுக்குத் தாழ்ந்து விட்டோம் என்று சிலர் அஞ்சுகின்றனர். இனி மேல் நாம் ஏற்றம் காணமுடியாது என்று மனமுடைந்து விட்டனர். சிலர் வருவது வரட்டும், விதி எவ்வழியோ அவ்வழியே ஆகட்டும் என்று சோம்பித் திரிகின்றனர் பலர். இந்த நிலை மாறவேண்டும். மாறித்தான் ஆக வேண்டும். நாம் நினைத்தால் மாற்றி அமைக்க முடியும் என்று முழங்குகிறது திருக்குர் ஆன். அதைத்தான் ஆசியாவின் அரும் பெருங் கவிஞர் அல்லாமா இக்பாலும் (ரஹ்) சொல்லுகிறார்.

**பார்! செக்கச் செவேரென்று சிவந்து கிடக்கும் அடிவானத்தைப் பார்! பூர்ண ஜோதியுடன் கிளம்பவிருக்கும் கதிரவனின் வருகையைத் தெரிவிக்கும் செம்பொன் வானத்தைப் பார்! நன்றாக உற்றுப் பார், அதிலே ஒரு பாடம் இருக்கிறது! உன்னைச் சூழ்ந்து இருக்கும் இருள் ஓடி மறைந்து விடும், இந்தக் கதிரவனைப் போல் நீ உன் சுய ஒளியுடன் எழுந்திரு! அன்று நடந்த அற்புதம் என்று, கூறுகிறார்களே! அது இன்றைக்கும் நடக்கும். உன்னைச் சுட்டு எரிக்கும் நெருப்புக் காட்டை நறுமணங் கமழும் மலர்கள் நிறைந்த சோலையாக்கலாம். அதற்குத் தேவையானது இப்ராஹீம் நபி (அலை) யிடமிருந்த ஈமான் ஒன்றே. உன் நம்பிக்கையை பரிபூரணமானதாக, பரிபக்குவமடைந்ததாகச் செய்துகொள். பிறகு பார்! உன் வல்லமையைக் கண்டு நீயே அதிசயிப்பாய்!**

**இஸ்லாத்தை மறந்து, உலக இன்பத்தைப் பெரிதெனக் கொண்டு, அதிலே திளைத்து வலுவற்றுப் போனாயே, அப்போது உன்னால் ஒன்றும் செய்யமுடியாது என்று தெரிந்தும் உன் கைகளைக் கட்டிப் போட்டனர். ஏன் தெரியுமா? இந்த சிங்கம் உறக்கத்தில் உள்ளது. இறந்துவிடவில்லை என்று அவர்களுக்குத் தெரியும், உன் சக்தி மகத்தானது. நீ மட்டும் கண்திறந்து பார்த்தால் இஸ்லாத்தின் அறிவுச் சுடரைக் கையில் ஏந்தி செயலில் இறங்கினால் போதும், உலகமே உன் காலடியில் இருப்பதைக் காண்பாய்.**

**நெருப்பை மலராக்கும் ஈமானைப் பெற, உன் சக்தியை உலகறியச் செய்ய முஹம்மது நபி (ஸல்) யின் பக்கம் திரும்பு, அவர்கள் காட்டிய வழியிலே நட. அவர்களுடைய ஒளியைக் கொண்டு உன் உள்ளத்தில் நிரம்பிக் கிடக்கும் இருளைப் போக்கிக்கொள். அப்போது நீ அறிவாய், இவ்வுலகமென்ன, சர்வலோகங்களின் உயிர் நாடியே உன் கையில் இருப்பதை! சர்வலோகப் நாயகனே உன் பக்கம்தானே இருப்பான்!**

# தியாக நாயகர்

★ ஹகீம் ★

நபிகள் பிரான் (ஸல்) அவர்களின் தனியன்புக்குப் பாத்திரரான பேரர்கள்; ஹஜ்ரத் இமாம் ஹஸன் (ரலி), இமாம் ஹுஸைன் (ரலி) ஆகிய இருவரின் முடிவும், என்றுமே மறக்க முடியாத, மிகவும் துக்ககரமான நிகழ்ச்சிகளாகும். இருவருமே உலகில் ஈடு இணையற்ற தியாகிகளாக வாழ்ந்து உயிர் துறந்தார்கள்.

இவ்விருவரின் தியாகங்களுக்கிடையே ஒரு வேற்றுமை தென்படினும் இருவரும் ஒரே லட்சியத்திற்காகவே போராடினுர்கள்; மடிந்தார்கள்.

இமாம் ஹஸன் (ரலி) அவர்களுடைய தியாக வாழ்க்கையின் மிகச் சிறந்த அம்சம், முஸ்லிம்களிடையே இரத்தக் களரியைத் தடுப்பதற்காகத் தங்களுடையதலைமைப் பதவியை, கிலாபத்தைத் துறந்ததாகும்.

நாயகம் (ஸல்) அவர்கள் மறைவுக்குப் பின் மக்களால் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப் பட்ட ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களுடைய தலைமைக்கு ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்கள் தலை சாய்த்த அன்றே இஸ்லாத்தில் பாரம்பரியமான பதவி உரிமைக்கு இடமில்லை என்ருகிவிட்டது. இதுவே இஸ்லாத்தின் மூலாதாரக் கொள்கைகளுக்கு முரணில்லாத முறையுமாகும். நான்காவது கலீபாவாக அலீ (ரலி) அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டது அறிவு, ஒழுக்கம், வீரம் ஆகிய துறைகளில் அவர்களுக்கிருந்த தகுதியால்தான்.

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் அந்திம காலத்தில் அவர்களிடம், "தங்களுக்குப் பின் ஹஜ்ரத் ஹஸன் (ரலி) அவர்களை நாங்கள் கலீபா ஆக்கலாமா?" என்று கேட்டவர்களுக்கு பதில் அளிக்கும் போதும் இக் கொள்கையை வற்புறுத்தும் முறையிலேயே, "நான் (இவ்விஷயமாக) உங்களுக்குக் கட்டளையிடவுமில்லை. தடுக்கவுமில்லை. உங்கள் உசிதப்படி செய்யுங்கள்" என்றே அவர்கள் கூறினுர்கள்.

பரம்பரைப் பதவிப் பழக்கத்தைப் புகுத்தி, இஸ்லாத்துக்கு முரணுன முடியாட்சி முறையை பனூ உமையா வம்சத்தின் மூலம் இஸ்லாமிய உலகின் மீது சுமத்திய பழி அமீர் முஆவியாவைச் சாரும்.

செல்வ மிக்க ஷாம் பகுதியின் கவர்னராக இருந்த அமீர் முஆவியா, அலீ (ரலி) அவர்களின் கிலாபத் பதவியை அங்கீகரிக்க மறுத்து காலமெல்லாம் அவர்களுடன் போரிட்டுக் கொண்டிருந்தார். இதற்காக பொது நிதி (பைத்துல்மால்) யின் பணத்தை எல்லாம் சேனைக்காகச் செலவழித்துத் தம் நிலைமையை நன்கு பலப் படுத்திக் கொண்டார்.

அலீ (ரலி) ஷஹீதான பின் அவருடைய நிலைமை நன்கு வலுப்பட்டது. ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களின் தலைநகரமான "கூபா" வாசிகளின் ஸ்திரமற்ற தன்மையும், ஆபத்தில் கைவிடும் மனப்பான்மையும் அந்த நிலைமையை உண்டு பண்ணின.

ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களுக்குப் பின் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஹஸன் (ரலி) அவர்களின்மீது அமீர் முஆவியா படை யெடுத்தார்.

அப்போழுதுதான், ஹஸன் (ரலி) அவர்கள், பதவிக்காக, வீணுக, இரத்தம் சிந்துவதைத் தவிர்க்கும் பொருட்டு, "முஆவியாவுக்குப் பின் மக்கள் விரும்புபவரை கலீபாவாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்" என்ற நிபந்தனையோடு கிலாபத்துப் பதவியை முஆவியாவுக்கு விட்டுக் கொடுத்து உடன்படிக்கை செய்து கொண்டார்கள்.

மதீனுவில் தம் குடும்பத்தினருடன் தனித்து வாழ்ந்து வந்த இமாம் ஹஸன் (ரலி) அவர்களை எதிரிகள் சூழ்ச்சியால் விஷங் கொடுத்துக் கொன்றுர்கள்.

இந்த சந்தர்ப்பத்தில் ஒரு விஷயம் மிகவும் குறிப்பிடத் தக்கது. ஹஸன் (ரலி) அவர்களுக்கு விஷம் கொடுத்தவர் மீது பழி வாங்க விரும்பி மரணப் படுக்கையிலிருந்த அவர்களிடம் ஹுஸைன் (ரலி), அவர்களுக்கு விஷம் கொடுத்தவரின் பெயரைக் கேட்டபோது, பின் வருமாறு பதில் கொடுத்தார்கள்:

"நான் யாரைச் சந்தேகிக்கிறேனே அதே ஆள் எனக்கு விஷம் கொடுத்திருந்தால் அந்த ஆளைத் தண்டிக்க இறைவன் போதுமானவன். அன்றி என் சந்தேகம் தவருக இருந்தால் என்னுல் ஒரு நிரபராதி வீணுகத் தண்டிக்கப் படக்கூடாது"

அமீர் முஆவியா, தம் உதவாக்கரை மைந்தனை யஜீது என்பானை கிலாபத்துப் பதவிக்குத் தம் வாரிசாக நியமித்து அவனுக்கு பைஅத் அதாவது விசுவாசப் பிரமாணம் செய்யும்படி எல்லோருக்கும் உத்தரவிட்ட செயல் இஸ்லாமிய சரித்திரத்திலே பெருந் தீய நிகழ்ச்சியாகும்.

உடன் படிக்கைக்கு மாருக, இஸ்லாமியக் கொள்கைகளுக்கும் அதற்கு முந்திய முப்பதாண்டுப் பழக்கத்துக்கும் எதிராக நடந்த இந்தச் செய்கைக்கு, ஹஜ்ரத் ஹுஸைன் (ரலி) அவர்கள் உடன்பட மறுத்ததில் வியப்பு ஒன்றும் இல்லையல்லவா?

ஆனுல் வியப்புக்குரிய விஷயம் என்னவென்ருல் அக்காலத்தில் எஞ்சியிருந்த ஸஹாபாக்களும் (நபிகள் நாயகத்தின் தோழர்கள்) மற்றும் அறிஞர்களும் எதிர்மொழி சொல்லாது முஆவியாவுடன் ஒத்துழைத்ததுதான். அந்த அளவுக்கு முஆவியா திறமையுடன் திட்டமிட்டு வேலை செய்திருந்தார்.

சீக்கிரமே, முஆவியாவின் மரணத்துக்குப் பின், பாதகங்களுக்கெல்லாம் உறைவிடமான யஜீது பதவியில் அமர்ந்த அன்றே அறத்துக்கும் மறத்துக்கும், மிருகத்தனத்துக்கும் மனிதத் தன்மைக்கும், யதேச்சாதிகாரத்துக்கும்

சுதந்திர உணர்வுக்கும் இடையே போர் ஆரம்பமாகியது.

மதீனமா நகரில் ஒதுங்கி வாழ்ந்து வந்த ஹுஸைன் (ரலி) யஜீதுக்கு பைஅத் செய்ய மறுத்ததினுல் பல இன்னல்களுக்கு ஆளானுர்கள். ஆள் பலம் தங்களுக்கு எவ்வளவு சொற்பமாக உள்ளது என உணர்ந்திருந்தும் யதேச்சாதிகாரத்துக்கு, தீமைக்கு, அசத்தியத்துக்குக் கட்டுப்பட மறுத்து, இறைவன் மீது நம்பிக்கை வைத்து யஜீதின் ஆட்சிக்கு எதிராகப் போர் முரசம் கொட்டினுர்கள்.

கூபா வாசிகளின் அழைப்புக்கிணங்க அவர்கள் ஆங்கு செல்ல ஆயத்தம் செய்த போது அவர்களுடைய அன்பரும், உறவினரும் கூபாக்காரர்களின் ஸ்திர மற்ற நடத்தையை அவர்களுக்கு நினைவுறுத்தித் தடுத்தபோதும் கூட, எந்த நிலைமையிலும் அசத்தியத்துக்கு, கொடுமைக்கு எதிராகப் போர் புரிந்தே தீருவது என்று அவர்களுக்கிருந்த உறுதிதான் அவர்களை இராக் தேசத்தின் பக்கம் செலுத்தியது.

நய வஞ்சகர்களான கூபாக்காரர்கள் பழைய படித் "தம் புத்தி"யைக் காட்டினர். கூபாவில் யஜீதின் பிரதிநிதியாக இருந்த ஜியாதின் "இரும்பு ஆட்சி"யிலே ஒடுங்கி விட்டனர் அவர்கள்.

ஒன்றுக்கு நூறு மடங்கான படையினுல் சூழப்பட்டபோதும், தாங்களும் தங்கள் குடும்பத்தினரும் "புராத்" நதியிலிருந்து ஒரு சொட்டு நீர்கூட எடுத்து வர முடியாது தாகத்தினுல் துடிக்க நேர்ந்த போதும் "யஜீது"ப் படையினரின் மிரட்டல்களுக்கெல்லாம் அஞ்சாது தம் சத்திய நிலையிலிருந்து ஒரு இம்மியும் பிறழவில்லை அந்த மா வீரர். அருகில் நெருங்க அஞ்சி, தூரத்திலிருந்தே அம்புகளெய்து, "அஹ்லுல் பைத்"தின் ஆண் பூண்டுகளெல்லாம் அற்றுப் போகும்படி விரோதிகள் செய்த போதும் அவர்கள் கலங்கிப் பணிந்து விடவில்லை. அதற்கு மாறுக இறைவன் சித்தத்தின் மீது இடையருத நம்பிக்கை வைத்துத் தம் கடைசி மூச்சு, சொட்டு ரத்தம் இருக்கும் வரை போராடினுர்கள்.

இந்த கோரக் காட்சிகளைக் காணப் பொருது துடித்து, அழுது பிரலாபித்த அவர்களுடைய சகோதரி ஜைனப் (ரலி) அவர்களையும் ஹுஸைன் (ரலி) அவர்கள் பார்த்து "சகோதரி! ரஸூல் (ஸல்) அவர்களுடைய முன் மாதிரியைப் பின் பற்றி எந்தக் கஷ்டத்தையும் இறைவன் நாட்டம் என்று கொண்டு பொறுமையாக இருக்க வேண்டாமா?" என்ருர்கள்.

இறுதியாக, ஷிம்ரு என்னும் கொடுந் தீயோன், கீழே விழுந்த தியாகிகள் நாயகரின் மீதேறி மிதித்து, சிரத்தை அறுத்து ஈட்டி முனையில் குத்தி ஏந்திச் சென்ற போது அச்சிரம் தீமையின் வெற்றிக்குச் சின்னமாகச் செல்ல வில்லை. மரத்துப் போன இருதயங்களில் புரட்சிக் கனலைக் கனிய விட்டுச் சென்றது.

ஹிஜ்ரீ 61-ம் ஆண்டு முஹர்ரம் மாதம் பத்தாந் தேதி யன்று கர்பலாக் களத்திலே சிந்தப்பட்ட தியாகிகளின் உதிரத்திலே ஊறி வளர்ந்த புரட்சியானது ஹிஜ்ரீ 132-ம் ஆண்டுக்குள்ளாக பனூ உமையா வம்சத்தை வேரோடு அழித்து ஒழித்தது. கர்பலா சம்பவத்துக்குப் பிறகு நான்கைந்து ஆண்டுகளுக்குள்ளாகவே, முக்தார் என்ற ஒரு வீரனின் தலைமையில் புரட்சிக் கூட்டம் ஒன்று புறப்பட்டு கர்பலாப்படுகோலையில் பங்கு கொண்ட ஒவ்வொருவனையும் தேடித் தேடி ஈவு இரக்கமின்றிக் கொன்று தீர்த்தது.

ஞாபகச் சின்னங்களையும் பிறந்த இறந்த தேதிகளையும் வைத்து பெரியோரின் பெருமைகளையும் நற் செயல்களையும் நினைவு கூர நினைக்கும் மனிதன் வெகு சீக்கிரத்தில் அப்பெரியோரின் நற் போதனைகளையும் நேரிய, சீரிய வாழ்க்கையையும் மறந்து வெறும் பெயர்களை மட்டும், மனிதர்களை மட்டும் நினைத்துப் பார்க்கிருன்; "வீர வணக்கம்" செய்கிருன்.

தியாக நாயகர் ஹஜ்ரத் ஹுஸைன் (ரலி) அவர்கள் விஷயத்திலும் இதே கூற்றுப் பொருந்தும்.

யதேச்சாதிகாரமாகப் பதவியலமர்ந்து, காமக்களியாட்டங்களிலும், குடி வெறியிலும் மூழ்கி, அசத்தியத்தின், தீமையின், பிரதிநிதியாக இருந்து ஆண்ட யஜீதுக்கு "விசுவாசப் பிரமாணம் செய்ய மாட்டேன்; எதிர்த்துப் போராடுவேன்." என்ற உறுதி பூண்டு சத்தியத்தை, இறை நெறியை, நிலை நாட்டுவதற்காக, அளவற்ற, கொடுமை யெல்லாம் அனுபவித்துத் தங்கள் உயிரையும் தியாகம் செய்யத் தயங்காத அந்தத் தீரரின் உள்ளப்பண்பு நம் எல்லோருக்கும் வேண்டும்; என்றும் வேண்டும்! ★

# வாழ்த்தும் வரவேற்பும்

அறிவும், ஆற்றலும், ஆர்வமும் மிகுந்த பல எழுத்தாளர்களின் சிறந்த எழுத்தோவியங்கள் 'மணி விளக்கி'ல், வெளியாகின்றன. அவை படிப்போரின் உள்ளத்தையும் இருதயத்தையும் கவர்ந்து நிற்கின்றன. மக்களின் அறிவு வளர்ச்சிக்கு இவ் வெளியீடு அதிகம் உதவுவதாக அமைந்திருக்கின்றது. ஒழுக்கத்தை உயர்த்துவதற்குதவும் கருவியாகவும் தென்படுகிறது. மக்களின் மேன்மைக்கு இவ்விதப் பிரசுரங்கள் மிக்க அவசியம். அவர்களது மதிப்புக்குரிய ஆதரவுக்கு இது பொறுத்தமும் உரிமையும் உள்ளதாகக் காட்சி அளிக்கின்றது. இதற்கு மென் மேலும் பெரும் வெற்றியுண்டாவதாக!

**மீ. முகம்மது இஸ்மாயீல் (எம். பி.)**
(தலைவர், இந்திய யூனியன் முஸ்லிம் லீக்.)

இஸ்லாமிய சமுதாயத்தின் உயரிய பண்பாட்டை மக்களுக்கு எடுத்துக் காட்ட பல பத்திரிக்கைகள் அவசியம். அந்த அவசியத்தைப் பூர்த்தி செய்யும் நோக்குடன் தோன்றியுள்ள **மணி விளக்கு** மாத சஞ்சிகையை நான் வரவேற்கின்றேன். இச் சஞ்சிகையின் இதுவரையும் வெளி வந்துள்ள இதழ்களைப் பார்த்தேன். அவைகளில் தோன்றும் கட்டுரைகள், அறிவாற்றல் தோய்ந்த எழுத்தோவியங்கள், மனத்திற்கிசைந்த கற்பனைக் கதைகள் எனக்கு மகிழ்ச்சியைத் தந்தன. நம் சமுதாயத்தின் மத்தியில் நிலைத்திருக்கும் சில சிறந்த சஞ்சிகைகளிடையே **மணி விளக்கு** நல்ல பிரகாசத்தோடு விளங்குவதுடன் நம் மக்களுக்கு நல்ல சேவை செய்யு மென்பதில் எனக்குச் சந்தேகமில்லை. **மணி விளக்கு** நீடூழி வாழ்வதாக.

**எம். எஸ். அப்துல் மஜீது**
(கௌரவ செயலாளர், தென் இந்திய முஸ்லிம் கல்விச் சங்கம்)

மணி விளக்'கு இதழ்களைப் படித்துப் பார்த்தேன். அவைகளில் ஒரு தெய்வ மணங் கமழ்கின்றது.

இப் பத்திரிகையில் உயர்ந்த கருத்துக்கள் கோயில் கொண்டிருக்கின்றன. இதைப் படிப்போரின் மனம் தூய்மை அடையும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை. இந்தத் திருஞான விளக்கு பொய் நின்ற பேய்க் காற்றில் அவியா வண்ணம் எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

**ரா. ஸ்ரீ. தேசிகன்**
(இலக்கிய விமர்சனப் புலவர். பேராசிரியர், மாநிலக் கல்லூரி சென்னை.)

சென்னை இஸ்லாமிய நண்பர்கள் வெளியிடும் 'மணி விளக்கு' என்ற பத்திரிகையின் இரண்டாவது இதழைப் படிக்கச் சொல்லிக் கேட்டேன். அவர்களுடைய நோக்கங்கள் மிகவும் போற்றத் தகுந்தவை என்பதில் யாதும் ஐயமில்லை.

'மணி விளக்கு' நந்தா விளக்காய் என்றென்றும் ஒளி பரப்பிக் கொண்டிருக்கும்படி திருவருள் உண்டாவதாக!

**தேசிகவிநாயகன்**
(கவிமணி)

முஸ்லிம் சகோதரர்கள் விரும்பிப் படிக்கின்ற முறையில் ''மணி விளக்கு'' பிரகாசிக்கின்றது. இதன் பிரகாசம் எங்கும் பரவி என்றும் நிலைத்திருப்பதாக!

**வெ. சாமிநாதன்**
(நூலாசிரியர்.)

......தமிழக முஸ்லிம்களிடையே பத்திரிகை படிக்கும் ஆர்வம் வளர்கிறது, அதிலும் சிறந்த பத்திரிகைகளைப் படிக்கும் பண்பு உயர்கிறது என்பதன் சின்னமாக மணி விளக்கு ஒளி வீசுகிறது.

......இஸ்லாமிய இலக்கியத்தை அழகு தமிழில் பரப்பும் பணியேற்று, பவனிவரும் மணி விளக்கு, தமிழக இஸ்லாமிய பத்திரிகை உலகில் நல்லதொரு முன் மாதிரியாகத் திகழ்கிறது. திருமறைப் பொருளுரைதந்து, திவ்யநபி மொழி வழிகாட்டி, மறந்த சரித்திரச் சாலை வழி கூட்டி வாசகர்களை அழைத்துச் செல்கிறது மணி விளக்கு.

.........ஏற்றுக்கொண்ட பணிக்கொப்ப மணி விளக்கின் எழுத்து முறையும், கருத்தமைப்பும் பொருத்தமாக வுள்ளன.

இஸ்லாமிய இலக்கிய அறிவு பெற விரும்பும் முஸ்லிம்கள் மட்டுமல்ல, முஸ்லிமல்லாதார்களும் தொடர்ந்து படித்துணர வேண்டிய சிறந்த மாத வெளியீடு மணி விளக்கு.

**—மறுமலர்ச்சி**

தமிழ் முஸ்லிம் சமுதாயத்துக்குச் சேவை செய்யும் சங்கற்பத்தோடு வெளியிடப்படும் இம்மாத இதழ் உண்மையில் தமிழ் இலக்கியத்துக்கே மகத்தான சேவை செய்யக் கூடியதெனில் மிகையல்ல. திருக்குர்ஆன் எடுத்துக் கூறும் உயரிய வாழ்க்கை முறையை மக்கள் எளிதில் விளங்கிக் கொள்ளக் கூடிய முறையில் கட்டுரைகளும் கவிதைகளும் மணி விளக்கை அலங்கரிக்கின்றன. சொந்தப் பிதுரார்ஜிதத்தை மறந்து வேற்றுக் கலைகளுக்குப் பின்னால் ஓடிக்கொண்டிருக்கும் முஸ்லிம் சமுதாயத்துக்கு இஸ்லாத்தின் இணையற்ற கலைப் பொக்கிஷங்களை எடுத்துக் காட்டிச் சீரிய வழியில் நடத்திச் செல்ல ஒரு கலங்கரை விளக்கமாக ''மணி விளக்கு'' விளங்குகிறதெனலாம். குறைந்த விலையில் இவ்வளவு உயர்ந்த ஒரு மாத வெளியீட்டைக் கொண்டு வந்த முயற்சியைப் பாராட்ட வேண்டும்.

**—தினகரன்**

...இஸ்லாமியப் பண்பாட்டையும் சமய விளக்கத்தையும் இஸ்லாமியரும் பிறரும் தெரிந்து கொள்ள உதவக்கூடிய நல்ல பத்திரிகை.

**—கலைக்கதிர்**

இஸ்லாமிய இலக்கிய மாத வெளியீடான இவ் விளக்கு மணி மணியான கட்டுரைகளையும், கதைகளையும், கொண்டு ஒளி வீசுகிறது. திருக்குர்ஆன் தெளிவுரை தொடர்ந்து தரும் முயற்சி இஸ்லாமியச் சகோதரர்களுக்கு மட்டுமின்றி, ஏனைய பிறருடைய சிந்தனையையும் தூண்டும் வழியாகும். பத்திரிகை அழகிய முறையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. நல்ல முயற்சி.

**—உமா**

.........''அனைவருக்கும் தோழனாகு-துணைவனாகு-வழிகாட்டியாக விளங்கிச் சேவை செய்வதே 'மணி விளக்'கின் லட்சியம்'' என்று ஆசிரியர் கூறியிருக்கிறார்.

இதுவரை வெளியாகியுள்ள ஏப்ரல், மே, ஜூன் மாத இதழ்களை ஒரு முறை பார்த்தாலேயே, 'மணி விளக்கின்' ஆசிரியர் குழாம் தங்கள் லட்சியத்தை நன்கு ஈடேற்றி வருகிறார்கள் என்பது தெரிகிறது.

முஸ்லிம் பெருமக்களிடையே யுள்ள சிறந்த தமிழ் எழுத்தாளர்களின் அழகிய எளிய இனிய தமிழைச் சுவைக்க உதவும் சாதனமாக 'மணி விளக்கு' உரு எடுத்திருக்கிறது என்று கூறினால் மிகையாகாது.

பொது மக்கள் ஆவலுடன் படிக்கும் எழுத்தோவியங்களான தொடர் கதை, நல்ல கற்பனைக் கதைகள், ருசிகரமான கட்டுரைகள் எல்லாம் இடம் பெற்றுள்ளன..........'மணி விளக்கு' முன்னேறி, 'எட்டுத் திக்கிலும் உள்ள இஸ்லாமிய இலக்கியச் செல்வங்களைக் கொணர்ந்து தமிழர் முன் வைத்து, அவர்களை அனுபவிக்கச் செய்யும்' நோக்கத்தையும் திறம்பட நடத்திக் காட்டும் என்பதற்கு உறுதிப்பாடுகள் இந்த இதழ்களில் புலனாகின்றன.

**—ஆனந்த விகடன்**

[ஆங்கிலப் பேராசிரியரான உயர் திரு, ரா. ஸ்ரீ. தேசிகன் எம். ஏ. அவர்கள், தமிழ் இலக்கியத்திற்கு விமர்சனம், சிறு கதை, தத்துவஞான விளக்கம் முதலிய துறைகள் மூலம் நற்றொண்டு செய்து வருபவர். இக் கட்டுரைத் தொடரில், மதம் மனித வாழ்வை எவ்வாறு பண்படுத்துகிறது என்பதை பிரபல ஆங்கில எழுத்தாளரான ஏ. ஸி. பிராட்லியின் கருத்துக்களைத் தழுவி அவர் விளக்குகிறர். எல்லா மதங்களையும் பற்றிப் பொது நோக்கோடு இது எழுதப் படுவதால், ஆங்காங்கு கருத்து வேறுபாடுகள் காணப்படலாம். எனினும், மதத்தைப் பற்றி பல்வேறு அறிஞர்களும் கொண்டுள்ள கருத்துக்களையும் நம் வாசகர்கள் அறிவது நலம் என்ற நோக்கோடு இதை மகிழ்வுடன் வெளியிடுகிறேம்.]

# சமய ஆராய்ச்சி

## ரா. ஸ்ரீ. தேசிகன் எம். ஏ.

## சமயத்தின் இலட்சியங்கள்

ஏ. ஸி. பிராட்லி என்ற பெரியோரை நினைக்கும் பொழுதெல்லாம், அவர் ஒரு விமர்சனப் புலவராகத்தான் நம் முன் காட்சி அளிக்கின்ருர் எனினும் கவிதைத் துறையிலும், ஷேக்ஸ்பியர் நாடக ஆராய்ச்சித் துறையிலும் அவர் அரும் பாடுபட்டு நமக்கு ஓர் அறிவுக் களஞ்சியத்தையும் நல்கியிருக்கிருர். சமயத் துறையிலும் அவர் இறங்கி அதன் நுணுக்கங்களை ஆராய்ச்சி செய்திருக்கிருர் என்ற உண்மை 'சமயத்தின் இலட்சியங்கள்' என்ற தலைப்பின் கீழ் 1907–ஆம் ஆண்டு அவர் புரிந்த கிவ்வோர்ட் சொற்பொழிவுகள் மூலம் புலனுகிறது.

இச் சொற்பொழிவுத் தொகுப்பின் முன்னுரையில் அவர் குறிப்பிட்டிருக்கும் சில விஷயங்கள் இங்கு நோக்கத் தகுந்தவை:

மதம் என்பது வெறும் அறிவின் தொழிலன்று; இறைவனை வழிபடுதலே மதமாகும். அது அக வழிபாடாயிருக்கலாம்; அல்லது புற வழிபாடாயிருக்கலாம். உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் அர்ப்பணஞ் செய்வதே மதம் என்று இவ்வாசிரியர் மொழிகின்ருர். வழி படுவதற்காக ஒரு நம்பிக்கை வேண்டும். வழிபடும் பொருள் எத்தன்மையது என்ற அறிவு வேண்டும். சமயத்தைப் பற்றிய அறிவுமட்டும் போதாது. அந்த அறிவு ஒரு பழுத்த அனுபவமாய்க் கனிய வேண்டும். ஆண்டவனிடத்தில் ஒரு நம்பிக்கை இல்லாமலேயே ஏன் மதம் பிறக்கக்கூடாது? என்ற வினவைப் பலர் எழுப்பியிருக்கின்றனர். ஆர்னல்ட் என்பவர் சமயத்தையும் மனப் பண்பையும் பிரிக்கின்ருர். சமயத்தைக் காட்டிலும் மனப் பண்பு தான் சாலச் சிறந்தது என்கிருர். டி. எஸ். எலியட் என்னும் நோபல் பரிசு பெற்ற கவிஞர் மத மில்லாமல் மனப் பண்பு எப்படிப் பிறக்கும் என்று 'வாதிக்கின்ருர்.

'மதம்' என்பது என்ன? அது எதை நாடுகின்றது? என்ற விஷயங்களைத் துருவி ஆராயவேண்டியது நம் கடமையாகும். மதத்தின் மூலம், காலப் பனி மூட்டத்தில் மறைந்து கிடக்கின்றது. மதம் என்பது ஒரு மலர். அந்த மலர் தோன்றுவதற்கு முன் எத்தனை நூற்றுண்டுகள் தேய்ந்திருக்க வேண்டும். பலவிதமான மலர்கள் சமயத் தோட்டத்தில் அலரலாம். ஆனுல் மலர்கள் தோன்றுகிற முறையைப் பற்றிய அடிப்படையான தத்துவம் ஒன்றியிருக்கிறது என்று சாற்றலாம்.

அக உயிரின் லட்சியத்தைப் பற்றி முதலிலே பிராட்லி தம் கருத்துக்களை வெளியிடுகின்ருர். மதம் தனித்த மனிதனின் அக உயிர்க் கழனியில் வேர் விட்டுத் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழுக்கின்றது.

அக் கனியின் தெய்வச் சுவையை அவன் தனித்து அருந்த விரும்புகிறதில்லை. அருந்துகிற முறையை அவன் வகுக்கின்ருன், அக் காரணம் பற்றியே புறத்திலே ஒரு வழிபாடு தோன்றுகின்றது. அதைச் சமுதாயம் பின் பற்றத் தொடங்குகின்றது. ஏகாந்த அனுபவந்தான் மதம் என்று ஒயிட் ஹெட் என்ற தத்துவ ஞானியும் உரைக்கின்ருரன்றே?

மதம் என்பது வழி படுதல். வழி படுதல் என்பது ஒன்றைப் பற்றித்தானே நிகழும். அந்தப் பொருளைப் பற்றி மனிதனுக்கு ஓரளவு அறிவு வேண்டும் என்பது கூறுமலே விளங்கும், அந்தப் பரம் பொருள் தொழுகிறவனைக் காட்டிலும் எல்லாவிதத்திலும் உயர்ந்ததாயிருக்கவேண்டும். அறிவிலுஞ் சரி, ஆற்றலிலும் சரி, அன்பிலுஞ் சரி, உயர்வற உயர் நலம் உடையதாய் அது திகழவேண்டும். அது அமானுஷ்யமாய், பிருகிருதிக்கப்பாலாய்க்காட்சி அளிக்கின்றது. அதை ஒரு பய பக்தியுடன், ஆச்சரியத்துடன், வியப்புடன் வழிபடுவோன் நண்ணுகின்ருன். அந்தப் பொருள் காலம், இடம்— இவைகளைக் கடந்து நிற்கின்றது. அதனுல்தான் அந்த அகண்டாகாரத் தத்துவத்தைக் 'கடவுள்'என்று அழைக்கின்றேம். நம்மைப் போல் அதற்குப் பசி, தாகம், பிணி, மூப்புத் துன்பம் முதலியன இல்லை. அது கூற்றுவனுக்கு ஒரு கூற்றுவனுய் ஓங்கி நிற்கின்றது.

அந்தப் பொருளுக்கும் வழி படுவனுக்கும் வித்தியாசமிருந்தாலும், அதற்கும் இவனுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கின்றது. வித்தியாசத்தையும் சம்பந்தத்தையும் மதம் சித்திரிக்கின்றது. சமயத்தின் நோக்கம் பிரபஞ்சத்தின் மூலத்தை ஆராய்வதன்று; அழகுணர்ச்சிக்கு அடிமையாவதற்கன்று. அறிவை வளர்ப்பதற்கன்று. அழகுணர்ச்சி, பேருணர்ச்சி, அறிவின் கிளர்ச்சி— இவை யாவும் சமயத்தில் இடம் பெற்றுலும், கெடுதலிலிருந்து விடுதலை அடைந்து பெரும் நலத்தை நாடுவதே அதன் குறிக்கோளாகும். கலைகள்கூட நுணுக்கமான புலன் நுகர்ச்சியாகும் என்று ஆல்டோஸ் ஹக்ஸிலி கூறுகின்ருர். கலைகளுக்கப்பால் நாம் செல்ல வேண்டும். எந்த இடத்தைத் தஞ்சமாகப் புகுந்தால், அச்சமெலாந் தீர்ந்து அருளமுதம் உண்போமோ, அந்த இடத்தைத்தான் மதம் சுட்டிக் காட்டுகின்றது. குறைபாடுகளுள்ள நம்மையும் பரம்பொருளையும் சேர்த்து வைக்கிறதுதான் மதம் என்று பிராட்லி நயன்பட நவில்கின்ருர்.

அந்தப் பரம்பொருளை ஒருவன் அச்சத்தோடு அணுகலாம்; அல்லது அளவுகடந்த அன்போடும் உவகையோடும், செய்ந் நன்றி உணர்ச்சியோடும் அதைப் பாடிப் பாடி அகங்கரையலாம்.

ஆண்டவனிடத்தில் வெறும் நம்பிக்கை வைத்தால் மட்டும் அது மதமாகாது; வெறும் உணர்ச்சிகள் மட்டும் போதா. ஆண்டவன் அருட்சக்திக்குத் தன்னை அடிமையாக்கிக் கொள்ளுவதே சமயமாகும்,

(தொடரும்)

# இருளும் ஒளியும்

என். எம். முஹம்மது கான் பி. ஏ., பி. எல்.

அந்தி மயங்கும் நேரம். மாலைக் கதிரவனின் பொன்ஒளி பட்ட இடங்களிலெல்லாம் இருளின் சாயல் படிய ஆரம்பித்து விட்டது. எண்ணற்ற மனித உள்ளங்களுக்கு இன்ப லாகிரியை யூட்டும் அந்தி வேளை ஏனோ ஜமால் ஹுஸைனின் மனத்திற்கு மகிழ்வூட்டவில்லை. அவனது பஞ்சடைந்த விழிகள் மேற்திசைப் பக்கம் திரும்பி எதையோ தேடி விட்டுத் திரும்பின.

மனச் சோர்வை நீக்க பீடியொன்றை எடுத்து புகைக்க ஆரம்பித்தான். உள்ளத்தின் உளைச்சல் என்னவோ நீங்கிய பாடில்லை. அவன் மனம் காலத்தைக் கடந்து பின்னோக்கிப் பறந்தது.

அப்பொழுதெல்லாம் அந்தி வேளையானால் தெருவிலே மகிழ்ச்சி களி நடம் புரியும் – கட்டுக்கடங்காத இன்பத் தேக்கம் மாலையானதும் இல்லங்களிலிருந்து வீதி நோக்கிச் சரிந்துவிட்டது போன்று குழந்தைகளெல்லாம் விதவிதமான ஆடைகளுடன் தெருவிற்கு விளையாட வந்து விடுவார்கள். கட்டிளங் காளைகளைப்பற்றிக் கேட்க வேண்டியதில்லை. அந்தக் காலத்திலெல்லாம் அவன் மனத்தில் தான் எத்தனை தெம்பு இருந்தது. தனக்கு "யாரும் நிகரில்லை" என்ற கர்வத்தோடு நடமாடினன்.

இப்படி அவன் இன்ப வெள்ளத்தில் முக்குளித்த அந்தக் காலத்தில் தான் ஸலீமாவும் அவன் மனத்தில் குடியேறினாள்.

ஸலீமா! எத்தனை இன்னிசை ததும்பும் பெயர். அப் பெயரின் நாதம் கேட்கும் போதெல்லாம் அவன் உள்ளம் அலைபாயும். அவள் பூப்பெய்திய பாவை. குப்பை மேட்டிலே கிடக்கும் பட்டை தீட்டாத வைரம்; மெருகேருத பொன்னகை; காட்டுப் புதரிடையே வளர்ந்து மரத்தில் அந்தரங்கமாகக் காய்த்து முதிர்ச்சியால் முத்துப் பற்கள் தெரிய வெடித்துச் சிரிக்கும் மாதுளை; ஜன சந்தடியற்ற இடத்திலே வளமுடன் வளர்ந்து மணத்தை அள்ளி வீசும் காட்டு ரோஜா–இவைதான் ஸலீமா. சருகுமான் போல் துள்ளித் திரிந்த அவளை, பருவமெய்தியதும் கட்டுப் பாடு எனும் விலங்கிட்டு வீட்டோடு பிணைத்துவிட்டனர். மாந்தளிர் போன்ற அவள் மேனி கதிரவனின் ஒளியினால் காயாமல் மேலும் சிவந்து, உழைத்து உரமேறிய வனப்புடன் சோபையுற்றுத் திகழ்ந்தது.

இன்னல் பல நேர்ந்த காலத்தில் அவளுடைய நினைவைப் பின்னுக்குத் தள்ளியிருக்கிறான். ஒரு வேளை அவன் அவளை மறந்து விட்டாலும் விட்டிருக்கலாம். ஆனால் அவள்............தன் மனத்துள் துளிர்த்த எண்ணத்தை நெஞ்சிலே போற்றி வளர்த்தாள். பெண்கள் மனதில் எந்த எண்ணமும் இலேசில் வேரூன்றுவதில்லை. ஆனால் ஓர் எண்ணம் வேரூன்றி விட்டால் அதை இலேசில் கிள்ளி எறிய முடிவதும் இல்லை.

அவன் மீது தனக்கிருந்த அன்பை, பிரேமையை, தன் செயலின்மையை, எத்தனையோ தடவை செயலிலேயே காட்டியிருக்கிறாள்; ஆனால் சொல்லால் அல்ல–அத்தனை நாணம் அவளுக்கு.

அவளுடைய தாயை அவன் சிற்றன்னை முறைவைத்து அழைப்பான். அவளுடைய வீட்டிற்குப் போகும்போதெல்லாம், "சின்னம்மா, குடிக்கக் கொஞ்சம் தண்ணி கொடுங்களேன்" என்பான். ஆனால் அவனுக்கு தண்ணீர் வார்த்துக் கொடுத்தனுப்புவதென்னவோ அவள்தான். அதைப் பருகுவதில்தான் எத்தனை இன்பம் அவனுக்கு!

வீட்டில் நெசவு செய்து கொண்டிப்பான். அதிகாலையிலிருந்து அபஸ்வர ஒலியை எழுப்பிக் கொண்டிருக்கும் தறி திடீரென்று நின்றுவிடும். அதுதான் அவன் ஓய்வு எடுத்துக்கொள்ளும் இடைவேளை. பீடியைப் பற்ற வைத்துக்கொண்டு திண்ணையில் உலாவுவான் அவன். வீட்டு வேலையாக அவள் இங்குமங்கும் நடமாடுவதை ஜன்னல் வழியாகக் காணும்போது அவன் சோர்வெல்லாம் நீங்கி அவனுடைய உடலிலே ஒரு புத்துணர்வு பிறக்கும். இருளடைந்திருந்த அவனுடைய மனத்திலே இன்பமயமான இந்த நினைவுகள் மின்னொளி போலத் தோன்றி மறைந்து கொண்டிருந்தன.

இவ்விதமான சிந்தனையில் எவ்வளவு நேரம் இருந்தானோ தெரியாது. "அல்லாஹு" என்ற பெருமூச்சொலி கேட்டுத்தான் இவ்வுலகுக்கு திரும்பி வந்தான். அவளுடைய தாய் படியேறி திண்ணையில் அவன் பக்கத்தில் வந்தமர்ந்தாள். "அம்மா" என்றான். அந்த ஒரு வார்த்தைக்குள் எத்தனையோ கேள்விகள் மடங்கியிருந்தன.

"அட, என் மகனே, அந்த நாசமாப் போனவள் ஊரில் இல்லையாமே. என் வயத்தில் மண்ணள்ளிப் போட்டுட்டாளே." என்றாள்.

அன்று அவர்கள் நம்பியிருந்த கடைசி உபாயமும் கைகூடவில்லை. எனவே இருவர் முகத்திலும் ஏமாற்றம் தென்பட்டது.

"அட, என் கண்மணி, உன் முகத்தைப் பார்த்துப்பார்த்து என் ஈரக்குலை கருகுதடா. நீ பசி தாங்க மாட்டாயே" என்றாள்.

"இன்னக்கி சாப்பிடாட்டா நான் ஒன்றும் செத்துப்போக மாட்டேன். நீ சும்மா இரு" என்றான்.

இப்படிப்பட்ட இக்கட்டான சந்தர்ப்பங்களிலெல்லாம் அவளுடைய தாய் பன்முறை அவளிடம் இருந்த ஒரு சில தங்க, வெள்ளி நகைகளையும் தன் மகனுடைய பசிக்குத் தத்தம் செய்திருக்கிறாள். ஏன் அவள் வீட்டில்

மின்னிக் கொண்டிருந்த வெண்கல, பித்தளைப், பாத்திரங்களெல்லாம் தனம் படைத்தவரின் இல்லங்களுக்குக் குடியேறிவிட்டன. அவனுடைய கடைசி ஆபரணத்தையும் தன் மகன் பசி தீர்ப்பதற்காக விற்க அவள் தயங்கவில்லை. ஆனால் அவளுக்கென்னவோ மனம் ஒப்பவில்லை. மனத்தில் குமைந்த வெறுப்பும் ஏமாற்றமும் அவனை வீட்டிற்கு வெளியே நெட்டித் தள்ளின. மேல் துண்டை எடுத்துப் போர்த்திக் கொண்டு வெளியே புறப்பட்டுச் சென்றான் அவன்.

ஃ ஃ ஃ

தெற்குச் சீமையான திருநெல்வேலி பிராந்தியத்திற்கு மின்வெட்டு யாத்திரை செல்வோரின் காதுகளுக்குக் கூட மேலப்பேட்டையின் பிராபல்யம் எட்டியிருக்கும். அவ்வூர் கைத்தறி நெசவுக்குப் பேர்போன இடம். அங்கு வசித்த பெருவாரியான மக்கள் "பாடுபடுவோம் பசியைப் போக்குவோம்" என்ற மூல மந்திரத்தில் அசையாத நம்பிக்கையுடையவர்கள். இருந்தும் சென்ற மகாயுத்தத்தில் கைத்தறி ஜவுளிகளுக்கு கிராக்கி ஏற்பட்டு நெசவு கூலி பன்மடங்காக உயர்ந்தது. எதிர்பாராத விதத்தில் வந்த தனத்தைப் பயன்படுத்த வழிதெரியாமல், தம்மைவிட நூறுபங்கு செல்வம் படைத்தவர் உண்ணும் உண்டியையும், புனையும் பட்டாடையும் அனுபவிப்பதையே லட்சியமாகக் கொண்டு, அதிலே வெற்றியும் கண்டு, அந்த வெற்றியின் பின் பலனாக ஓட்டாண்டியானவர்கள். தங்கள் உழைப்புச் சக்தியை மூலதனமாகக் கொண்டு வாழ்ந்த அவ்வூர் மக்கள் கால மாற்றத்தால் தங்களுடைய தொழிலுக்குண்டான மதிப்புத் தாழ்ந்து போகவும், தங்களைப் பிடித்திருக்கும் வறுமைக்கு விமோசன மளிப்பதற்காக, நின்று போன யுத்தம் திரும்பவும் தொடங்காதா என்று கூட எண்ணி ஏங்கினர்.

வறுமையின் நெரிப்பைத் தாங்கவியலாத ஒருசிலர் ரங்கூன், கொழும்பு முதலிய அக்கரைச் சீமைக்கு விரைந்தனர். பலர்—அதாவது தன்மானத்தைத் தங்களுடைய செல்வத்தோடு போக விட்டவர்கள் — பல்லிளித்து, கையேந்தும் தொழிலில் ஈடுபட்டு அத்தொழிலிலே வெற்றியும், முன்னேற்றமும் கண்டனர்.

ஃ ஃ ஃ

ஜமால் ஹுஸைன் வீடு திரும்பும்போது மணி ஏழு இருக்கும். பசி வயிற்றைப் பிடுங்கியது. மடியைத் துழாவினான். இரண்டு அரையணாக்கள் தட்டுப்பட்டன. வழியில் இருந்த ஹோட்டலுக்குச் சென்று ஒரு "சிங்கிள் டீ அடித்து" விட்டு வரலாமென்று நுழைந்தான். டீ என்னவோ அன்று அமுதம்போல இருந்தது. சாப்பிட்ட பின் காசைக் கல்லாவில் வீசி எறிந்து விட்டு வீடு நோக்கி விரைந்தான்.

வீட்டில் விளக்கொளியின்றி இருள் மண்டிக் கிடந்தது. மின்சார விளக்கொளியில் நடந்து வந்ததால் திக்குத் திசை தெரியவில்லை. "அம்மா" என்று குரல் கொடுத்தான். பதிலில்லை. ஒருவேளை வெளியே எங்கும்போயிருப்பாளோ என்றெண்ணி குரலைச் சற்று ஏற்றிக் கூப்பிட்டான் அப்பொழுதும் பதிலில்லை.

உள்ளே அவன் தாய் "மக்ரிப்" தொழுகையை முடித்துவிட்டு, தொழுகைப் பாயில் உட்கார்ந்தவாறே கையேந்தி "துஆ" கேட்டுக் கொண்டிருந்தாள். அப்படிப்பட்ட நேரங்களில் அவள் யாரிடமும் பேச்சுக் கொடுப்பதில்லை. தூய வெள்ளையுடை உடுத்தியிருந்ததால் சீக்கிரத்தில் அவளிருக்கும் இடத்தைக் கண்டு கொண்ட, ஜமால் அவள் பக்கம் சென்று அவளருகில் அமர்ந்தான். கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வழிந்தோடியது. ஆனால் விக்கலோ விசும்பலோ இல்லை. உதடுகள் கூடிப்பிரியும் ஓசை மாத்திரம் கேட்டது. இவற்றையெல்லாம் பார்ப்பதற்கு இருள் தடையாக இருந்தாலும் அவனால் அதை உணர முடிந்தது.



பிரார்த்தனை முடிந்ததும், "விளக்கு ஏத்தலையா" என்றான் அவன்.

"மண்ணெண்ணெய் இல்லையப்பா. அடுத்த வீட்டிலே ரெண்டு நாளா கடன் வாங்கியாச்சி. இப்போ கேக்கிறதற்கு 'மானமா' இருக்கே, என்றாள் அவள்.

அவன் மனம் வேதனையில் உழன்றது. ஹோட்டலுக்குச் செல்லாமலிருந்தால் அந்தக் காசைக் கொண்டு மண்ணெண்ணெய் வாங்கியிருக்கலாமே என்

றெண்ணினான்.

அப்பொழுதுதான் அவனுடைய தாய்க்கு நினைவு வந்தது, அன்று வெள்ளிக் கிழமை இரவென்று. இதர நாட்களில் எப்படி இருந்து விட்டாலும் அன்றிரவு வீட்டில் விளக்கொளியில்லாமல் இருப்பதா? இதைப் பிறர் பார்த்தால் என்ன நினைப்பார்கள்? அவள் இருதயம் மான உணர்ச்சியால் சாம்பியது. வெளிக் கதவைச் சாத்தித் தாளிட்டு விடும்படி மகனிடம் சொன்னாள். அவனும் எழுந்துசென்று கதவைத்தாளிட்டு விட்டுத் தாயருகில்வந்தமர்ந்தான்

இதுதான் தக்க சமயம் என்றெண்ணி ஆரம்பித்தான். "இப்படியே எத்தனை நாளைக்குத்தான் கஷ்டப்படுவது. இன்னும் 10 நாளையிலே நம்ப அஹ்மதலி ரங்கூனுக்கு போறாராம். என்னையும் கூப்பிட்டார். நானும் வாரதாகச் சொன்னேன்" என்றான்.

இதைக் கேட்ட அவன் தாய் திடுக்கிட்டாள். "என்னுடைய வாழ்வின் ஒரே நம்பிக்கையாக, பற்றுக் கோடாக இருக்கும் தனயன் என்னைப் பிரிந்து அயலூர் செல்வதா? சென்றால் என்னுடைய கதி?" இவ்வாறாக அவள் சிந்தனை ஓடியது. அன்பு தோனிக்கும் குரலில் அவள் சொன்னாள் "அதெல்லாம் போக வேண்டாம்பா. நீ போயிட்டா நான் எப்படித் தனியா இருப்பேன். உள்ளதைவைத்துக் காலத்தை தள்ளுவோமப்பா............நம்ம உமர் லெப்பை இருக்காரில்லே, அவர் உன் தகப்பனாரோடே ஓதினவர். உன்னைப்பற்றி அவர்கிட்ட சொன்னேன். அவர் உன்னை வீட்டுக்கு வரச் சொன்னார். நாளைக்குத்தான் போய்ப் பாரேன்" என்றாள்.

ஹுஸைன் தன் தாயின் சொல்லை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான். அதுவும் அவன் தாய் தொழுகை முஸல்லாவிலிருந்து ஏதாவது சொன்னால் மறுத்துப் பேச அவனுக்குத் திராணி கிடையாது. ஏதோ தெய்வ பரவசமாக இருப்பதாக ஒரு பிரமை அவனுக்கு. "சரி" என்று ஒரே வார்த்தையில் பதிலளித்தான்.

ஃ ஃ ஃ

அடுத்த நாள் தன் தாய்சொன்ன முதலாளித் தரகன் வீடு நோக்கி நடந்தான். தெருவில் நுழைந்த பின்புதான் அவருடைய வீட்டில் ஏதோ விசேஷமென்று தெரிந்தது. வீட்டுக்குள் செல்வதா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே உமர் லெப்பையும் வீட்டிலிருந்து தெருவுக்கு வந்தார்.

உமர் லெப்பை "ல"கரத்தில் புரளும் பெரும் புள்ளி. அவர் வீட்டில் விசேஷமென்றால் விருந்து இல்லாமலா போகும்? விருந்துக்கான ஏற்பாடு தெருவில் கனஜரூராய் நடந்து கொண்டிருந்தது. இதுமாதிரி எங்கே விருந்து நடக்கிறது என்று மோப்பம் பிடித்து அறிவதில் அதீத சக்தி பெற்றிருந்த ஒரு பட்டினிப் பட்டாளம் அவர் வீட்டை முற்றுகையிட்டிருந்தது. அவர்களைக் கண்டதும் அவருடைய சினம் பீறிட்டது. "யார் இந்த நாய்களை வந்து கூட்டம் போடச் சொன்னது. வெருட்டி அடியுங்கள்." என்று ஆக்ஞை பிறப்பித்தார்.

அவர் அருகில் போய் நின்ற ஹுஸைனைத் துச்சமாகப் பார்த்து விட்டு "உனக்கென்னடா" என்றார். அன்று அவரைப் பார்க்க வருபவரெல்லோரும் சோற்றுப் பிச்சை கேட்பவர்களாகவே தோன்றினார்கள்.

"எங்கம்மா உங்ககிட்டே....." என்று ஆரம்பித்தான் அவன்.

"அம்மாளாவது ஆத்தாளாவது? அதெல்லாம் இப்போ சௌகரியப் படாது" என்றார் அவர்.

"அதில்லே........"

"போன்னா போயேண்டா" என்ற அதட்டல் பிறந்தது. மேலே பேச மனமில்லாதவனாய் வீடு நோக்கித் திரும்பினான். இந்தச் சம்பவம் ரங்கூனுக்குப் போக வேண்டுமென்ற தீர்மானத்தை உறுதிப்படுத்தியது. அவன் தாயினால் எத்தனை முயன்றும் அவனுடைய உறுதியைக் குலைக்க முடியவில்லை.

ஃ ஃ ஃ

ரங்கூன் சீமையும் ஜமால் ஹுஸைனின் நம்பிக்கையை மோசஞ் செய்யவில்லை. ராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த ஒருவர் அவனை வேலைக்கு வைத்துக் கொண்டார். நாட்டுப் புறங்களில் வியாபாரம் செய்யும் சுதேசிகளுக்கு சரக்குகளை கடனாகக் கொடுத்து வியாபாரம் செய்தார். அதனால் அவருடைய மூலதனமெல்லாம் கடன்காரர்களின் கையில் முடங்கிக் கிடந்தது. உள்நாட்டுக் குழப்பத்தால் கடன் வசூல் ஒழுங்காக நடைபெறவில்லை. எனவே அவர் ஹுஸைனிடம் எப்படியோ அந்த வேலையைத் துணிந்து ஒப்படைத்தார். இதிலே அவனுக்கு நல்ல வருவாய். வறுமையின் கசப்பை சுவைத்திருந்தவனல்லவா? சிக்கனமாக வாழ்க்கை நடத்தி தாயாருக்கு எப்படியாவது மாதம் ஐம்பது ரூபாய் அனுப்பிவந்தான்.

அவனுடைய தாயிடமிருந்து தவறாது கடிதங்கள்வரும். என்ன விநோதமான கடிதங்கள்! அரிச்சுவடியைத் தாண்டாத பேர்வழி பேசும் கொச்சை மொழிக்கு உருவம் கொடுக்க முயற்சித்து அதில் தோல்வியடைந்ததின் சின்னங்கள்தான் அவைகள். அவற்றை எழுதுவது ஸலீமாதான் என்பது அவனுக்குத் தெரியும்.

மாதங்கள் ஓடி மறைந்து ஓராண்டை எட்டியது. அங்கு தொழில் நடத்துபவர்கள் அவ்வூர் வந்து ஓராண்டானதும் சுயதேசம் திரும்புவது வழக்கம். அவனும் அந்த நாளையே எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

திடீரென்று ஒரு நாள் அவன் தாயிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதம்தான் அவனது வாழ்வின் இலக்ஷியம் சித்தித்து விட்டது என்ற சுபச் செய்தியைச் சுமந்துவந்தது. அவனது திருமணம் ஸலீமாவுடன் நிச்சயமாகி இருந்தது.

அருமை மகனின்றி வாழ்வது பாத்திமாவிற்குக் கசந்தது. தன் ஆன்மாவையே பறிகொடுத்தது

போல் வாழ்ந்து வந்தாள். இந்த இன்னல் நிறைந்த வாழ்விலும் ஐந்து வேளைத் தொழுகையையும் குறைவின்றி நிறைவேற்றி அவன் நலத்திற்காக துஆச் செய்த வண்ணமிருந்தாள்.

ஃ ஃ ஃ

அன்றுதான் ஜமால்ஹுஸைன் ஊருக்கு வருகிறன். அவன் வரும் செய்தியறிந்த பாத்திமாவின் உள்ளம் எல்லை மீறிய மகிழ்ச்சியில் மூழ்கியது. பொள்ளஹற்ற அவளது தேகம் அதைத் தாங்க முடியாமல் தத்தளித்தது. உடலிலே படபடப்பு ஏற்பட்டுச் சித்தம் பேதலித்தவள்போல நடந்து கொண்டாள்.

அவனும் வந்துவிட்டான். வந்தவனைக் கண்டதும் அவனைக் கட்டித் தழுவ எண்ணி அவனிடம் ஓடினுள். ஆனல் அவனை அணுகு முன் மயங்கி விழுந்து விட்டாள். பிரக்ஞை தெளிய முகத்திலே தண்ணீர் அடித்தார்கள். சுய உணர்வு திரும்ப வெகு நேரமாயிற்று.

தன்னைச் சுற்றி நின்ற கூட்டத்தில் அவள் கண்கள் தனயனைத் தேடின. அவனைப் பார்த்ததும் ஏதோ சமிக்ஞை செய்தாள். அருகில் கிடந்த தகரப் பெட்டியை சுட்டிக் காட்டுவதாகத் தெறித்தது.

ஜமால் ஹுஸைன் பெட்டியை எடுத்துத் திறந்து பார்த்தான். அதனுள் அறுநூறு ரூபாய்க்கு நோட்டுகள் இருந்தன. அவன் 12 மாத காலமாக அனுப்பிய பணம்! என்ன, அதனின்றும் அவள் எதுவும் செலவு செய்யவில்லையா? அவளிடம் கேட்டு விட வேண்டும் போல இருந்தது அவனுக்கு. ஆனல் அதற்கு சமயம்?

அவன் அவளை அணுகினன். அவள் ஏதோ சொல்ல முயன்றுள். உதடுகள் பிசுபிசுத்தனவேயொழிய வார்த்தைகள் ஒலி வடிவெடுக்காமல் கண்டத்திலே மங்கி மறைந்தன. சோகம் நிழலிட்டிருந்த அவள் வதனம் தீடீரெனப் பளிச்சிட்டது. அணையும் விளக்கின் கடைசி ஜோதியா? சற்று நேரத்தில் அவள் உயிர் பிரிந்தது.

இந்த எதிர் பாராத மரணம் அவனுக்கும் அதிர்ச்சியை ஏற்படுத்தி அவனும் மயங்கி விழுந்து விட்டான்.

இப்படி எவ்வளவு நேரம் கிடந்தானே? உணர்வு திரும்பியதும் எழுந்தோடித் தன் தாயின் சடலம் கிடத்தப்பட்டிருந்த இடத்திற்குச் சென்று நெஞ்சு வெடிக்க அலறினன். தாயின் மேல் கிடந்த அவனது கரத்தில் வெது வெதுப்பான இரு கண்ணீர் முத்துக்கள் விழுந்து தெரிந்தன.

ஏறிட்டுப் பார்த்த அவனுடைய கண்கள், இருள் சூழ்ந்துபோன அவனுடைய இல்லத்துக்கு ஒளி யூட்ட வந்த ஜோதி போல, அருகில் நின்று, தலை குனிந்த வண்ணம் கண்ணீர் சிந்தித் தேம்பிக் கொண்டு நின்ற ஸலீமாவைக் கண்டன.

அவன் அழுகுரல் மேலும் ஓங்கி, கேட்போர் உள்ளத்தைப் பிய்த்து எடுத்தது. ★★



# மதிப்புரை

மதிப்புரைக்கு புத்தகம் அனுப்புவோர் அவசியம் இரண்டு பிரதிகள் அனுப்பிவைக்க வேண்டும்.

## திருக் குர்ஆன் பொன் மொழிகள்

(தொகுத்தவர்: எம். அப்துல் வஹ்ஹாப், எம்.ஏ., பி.டி எச். வெளியிட்டோர்: பிரேமா பிரசுரம். 63, ஆர்காட் ரோடு சென்னை-24. கையடக்க அளவில் பக்கம் 96. விலை அணு 8)

திருக் குர்ஆன் என்பது எவ்வளவு உயரிய வேதம் என்ற உண்மையை எம் மதத்தினரும் எளிதில் தெரிந்து கொள்ளப் பேருதவியாக இருக்கும் இத்தொகுப்பை வெளியிட்டுள்ள பிரேமா பிரசுரத்தினருக்குத் தமிழகம் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளது.

அகர வரிசையில், நல்ல கருத்துகள் செறிந்த பல தலைப்புகளின் கீழ், திருக் குர்ஆனிலிருந்து வசனங்களைப் பொறுக்கி எடுத்துத் தொகுக்கப்பட்டிருக்கும் இச் சிறு நூலுக்கு மேலும் அணி செய்யும் வகையில் அமைந்திருக்கிறது, இதன் தொகுப்பாளரின் அழகிய முன்னுரை.

நம் வாசகர்கள் அனைவரும் இதனைப் படித்துப் பயன் பெறுவதோடு தமது பிற மத நண்பர்களுக்கும் அன்பளிப்பாக வழங்கினல் ''இஸ்லாம்'' என்பது உண்மையில் என்ன என்று அவர்கள் அறியும் வகையில் மிகச் சிறந்த சேவை செய்தவர்கள் ஆவார்கள்.

கண்ணைக் கவரும் 'ஆர்ட் ஜாக்கெட்'டுடன் வெளியிடப்பட்டுள்ள இவ்வுயரிய தொகுப்பு நூலை, உள்ளே இன்னும் நல்ல தாளில் அச்சிட்டிருந்தால் சிறப்பாக இருக்கும். —மு. ஹ.

## கல்புல் குர்ஆன், யாஸீன் ஸூரா

(2-ஆம் பதிப்பு. மொழி பெயர்ப்பாளர், மௌலவீ ஸ. அ. அப்துல் அஜீஜ் பாகவீ. வெளியிடுவோர் அ. இல்யாஸ் அஹமத், 272, மெயின் ரோடு, ஐயம்பேட்டை. பக்கங்கள் 234. ஹதியா ரூ. 3)

'' திருமறையின் இதயம் '' எனப்படும் யாஸீன் ஸூராவை ஒவ்வொரு ஆயத்தாக எடுத்துக் கொண்டு, மொழி பெயர்ப்பும் அதற்கு விரிவுரையும் எழுதி யிருக்கிறர், ஆசிரியர். ஆங்காங்கு, குர்ஆனின் மற்ற பகுதிகளிலிருந்தும் ஹதீதிலிருந்தும் ஆதாரங்கள் தந்தும் பல்வேறு மொழிகளிலும் உள்ள தப்ஸீர்களில் இருந்து மேற்கோள்கள் காட்டியும், மிக்க சிரமத்துடனும், தாம் மேற்கொண்ட மகத்தான வேலையின் மீது அன்புடனும் சிரத்தையுடனும், ஆசிரியர் இந்நூலைத் தயாரித்திருக்கிறர். யாவரும் இதனை வாங்கிப் படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறோம்.

'' முஸ்லிம்களின் பராமுகம் '' என்ற தலைப்புள்ள பாராக்களில் திருக் குர்ஆனுக்கு தமிழில் மொழி பெயர்ப்பே இல்லை என்ற கருத்துப்பட 1944-இல் எழுதியதை, தமிழில் நல்ல ஒரு மொழி பெயர்ப்பு வெளியான பின்னரும் கூட அப்படியே மாற்றமல் பிர

சுரித்திருப்பது சரியல்ல. ஐந்தாம் ஆயத்தின் ''அஜீஜிர் ரஹீம்'' என்ற சொற்றொடரின் மொழி பெயர்ப்பு ''வல்லோனும் அன்புடையோனுமான'' என்று இருக்க வேண்டியதை ''அன்புடையோனும் வல்லோனுமான'' என கவனக் குறைவால் இடமாற்றி எழுதப்பட்டிருக்கிறது. விஷயம் சிறிது போல் தோன்றினாலும் குர்ஆன் ஷரீபின் மொழி பெயர்ப்பிலே இது போன்ற தவறுகளைக் கவனியாது விட முடியாது. றகர, ரகர பேதமும், ணகர னகர பேதமும் உணரப்படவில்லை என்பதற்குச் சான்றுகள் நூல் முழுவதும் காணப்படுகின்றன. சுவர்க்கவாசிகட்கு ''தாடி மீசைகளும்..............ளில் உரோமங்களும் இருக்கமாட்டா'' என்பது போன்ற தேவையற்ற, சரியான ஆதாரமில்லாத வியாக்யானங்களும் இல்லாமலிருந்தால் கூட இந்நூல் பூரணமாகவே இருந்திருக்கும். சிறப்புரையின் அடிக்குறிப்பாக, ''இதற்கு முன், ஆசிரியர் இரு கிரந்தங்களை எழுதி மனமுவந்து இரு பெரியோர்கட்குக் கொடுத்து, அவை அவர்கள் பெயரால் பிரசுரமாயிருக்கின்றன'' எனப் பிரசுரகர்த்தர் குறிப்பிட்டிருப்பது ஆசிரியரவர்களை எவ்வகையிலும் பெருமைப்படுத்துவதாக இல்லை.

அத்துடன் ''யாஸீன்'' ஸூரா அரபி வாசகம் முழுவதையும் ஒன்ருக இறுதியில் சேர்த்து அச்சிட்டால் இந்நூலின் பிரயோஜனம் அதிகரிக்கும். —செ. மு.

## ஆத்தூர் திருக்குர்ஆன் இயக்கப் பிரசுரங்கள்

இறைவனின் அரு மறையை உலகுக்குப் பரப்ப வேண்டும், மக்கள் குலம் உய்ய வேண்டும் என்ற அருமையான நோக்குடன் தோன்றியது திருக்குர்ஆன் இயக்கம். இயக்கத்தின் திட்டம், திருக் குர்ஆன் வகுப்புகள் நடத்தல், பிரசுரங்கள் வெளியிடல், சொற்பொழிவுகள் நிகழ்த்தல் ஆகியவையாகும்.

மதராஸிலிருக்கும் திருக் குர்ஆன் இயக்கத்துக்கு தென்னிந்தியா, இலங்கை ஆகிய இடங்களில் பல ஊர்களில் கிளை இயக்கங்கள் உள்ளன. இவற்றில் ஒன்ருன ஆத்தூர் (சேலம்) கிளையினர் சமீப காலமாக 7 துண்டுப் பிரசுரங்களையும் தொழுகை சம்பந்தமான சிறிய புத்தகமொன்றையும் இலவசமாக வெளியிட்டுள்ளனர். இந்த இயக்கத்தின் கிளைகள் தமிழ் நாட்டின் ஒவ்வொரு ஊரிலும் தோன்ற வேண்டுமென்பதை எல்லா முஸ்லிம்களும் எண்ணத்தில் கொண்டு செயலாற்றுவார்களானல் இறைமறையின் மகத்துவம் ஓங்கும்.

ஆத்தூர் கிளையினர் வெளியிட்டுள்ள துண்டுப் பிரசுரங்கள் ஒவ்வொன்றும் ஓர் அறிவுப் பொக்கிஷமாக விருக்கிறது. ''தொழுகை'' என்னும் சிறு புத்தகத்தில் காணப்படும் பிழைகளை வரும் பதிப்பில் மாற்றிக் கொண்டால் நலமாயிருக்கும். இவர்களின் நல்ல தொண்டுக்கு ஆண்டவன் நல்லருள் புரிவாஞக.

மேற்கண்ட துண்டுப் பிரசுரங்களைப் பெற விரும்புவோர், ''காரியதரிசி, திருக் குர்ஆன் இயக்கம், புதுப்பேட்டை, ஆத்தூர் போஸ்ட் சேலம் ஜில்லா'' என்னும் முகவரிக்கு ஒரு அணு ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். —ஏ. எம். மீரான்

### 1. தொழுகையின் தத்துவ விளக்கம்

(48 பக்கங்கள் விலை 10 அணு)

### 2. ''தப்லீக்'' சன்மார்க்க அழைப்பு

(84 பக்கங்கள் விலை 1 ரூ.)

ஆசிரியர்: கலீலூர் ரஹ்மான் ஸாஹிப் ரியாஜி, ரஹ்மத் லாட்ஜ், 127, பாண்டிய வேளாளர் தெரு, மதுரை.)

1. தொழுகையின் தத்துவங்களை நன்ருக ஆராய்ந்து விளக்கும் ஒரு சிறந்த நூல். தொழுகையின் ஒவ்வொரு அங்கத்துக்கும் உள்ள உட்பொருளும் சிறப்பியல்புகளும், நியமங்களும் நன்கு விவரிக்கப்பட்டிருக்கின்றன.

2. தமிழ் நாட்டு முஸ்லிம்களுக்கு இன்று நன்கு பரிச்சயமாகி விட்ட ''தப்லீக்'' இயக்கத்தின் நோக்கங்கள், திட்டங்கள் முதலியவற்றை குர்ஆன் ஹதீது மேற் கோள்களுடனும், அவ்வியக்கத்தின் ஸ்தாபகரான மௌலாஞ முஹம்மது இல்யாஸ் அவர்களுடைய கடிதங்களிலிருந்து எடுக்கப்பட்ட வாசகங்கள், மற்றும் ஆதாரங்களோடும், மிகத் தெளிவாக நல்ல தமிழில் விவரிக்கும் இந்நூலை மதுரை நூறுல் ஹக் அச்சகத்தார் நல்ல தாளில் அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுத்திருக்கிருர்கள். எனினும் ஒரு இயக்கத்தை மக்களிடையே பிரசாரம் செய்யும் நோக்கத்துடன் வெளியிடப்படும் நூல் இன்னும் மலிவாக வெளியிடப்பட்டிருக்க வேண்டும்.

''ஆங்கில அரசாங்கத்தாரின் இராணுவம் உலக வாழ்க்கையை வளம் பெறச் செய்வதற்காக ஓயாது உழைத்ததே போன்று நாமும்...'' என்னும் வாசகம் இந்நூலில் ஓரிடத்தில் வருவது வாசகர்களின் மனத்தில் குழப்பம் உண்டு பண்ணக்கூடியதாகும். முஸ்லிம்கள் முன் மாதிரியாகக் கொள்வதற்கு இஸ்லாமிய சரித்திரத்திலிருந்து எவ்வளவோ எடுத்துக்காட்டியிருக்கலாம்.

## ஆறு கலிமாக்கள்!

(ஆசிரியர்: கே. ஸையத் அப்துல் கபூர் சாஹிப், கிடைக்குமிடம்: முஸ்லிம் புக்டெபோ, 7, மால் வீதி, மதுரை. பக்கம் 32, விலை 4 அணு),

ஐந்து கலிமாக்களுடன் ''ஸையிதுல் இஸ்திக்பார்'' என்று அழைக்கப்படும் துஆவை ஆரும் கலிமாவாக்கிச் சேர்த்து, அரபி மூலங்களுக்கு, தமிழ் உச்சரிப்புடனும் அர்த்தத்துடனும் வெளியிடப்பட்டுள்ள இச்சிறு புத்தகம் நற்பயன் தரக் கூடியதாகும்.

நூலின் இறுதியில் ''ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இஸ்லாமியர்கள் சொல்ல வேண்டிய திரு வாக்கியங்கள்'' என்ற பகுதியில் சில பிழைகள் காணப்படுகின்றன.

—செ. மு.

## ஏழை நான்

(ஆசிரியர்: எஸ். எஸ். ஏ. கபீர். வெளியீடு: புதுமைப் பதிப்பகம், கிருஷ்ணகிரி, பக்கங்கள்: 156, விலை ரூ. 1-4-0),

ஏழையாகப் பிறந்து, வேலையில்லாமல் தவித்து, இலங்கை, மலேயா, தென் ஆப்ரிக்கா முதலிய நாடுகளுக்கு பிழைக்கச் சென்று இந்தியாவுக்குத் துரத்தியடிக்கப்பட்ட கதாநாயகன், இறுதியில் யுத்தத்தில் ஈடுபட்டு நாட்டுத் தலைமைப் பதவியை ஏற்கிருன். இந்திய நாடு சுபிட்சமடைகிறது. இக்கதையை பதிறு பக்கங்களில் மிக அழகாக நெஞ்சையள்ளும் விதத்தில் எழுதியிருக்கலாம்.

மதங்களையும், அரசாங்கத்தையும் கேவலப்படுத்தி எழுதினுல் புத்தகம் அமோகமாகவிற்பனையாகும் என்ற அடிப்படையில் உருவாகியிருக்கிறது இப்புத்தகம். கதைக்காக பதினறு பக்கங்கள் ஒதுக்கியது போக, மற்ற 140 பக்கங்களையும் அனுவசியமான வசைகளால் நிரப்பப்பட்டுள்ளன. அடுக்கு மொழி நாகரிகத்தில் சிக்கிச் சிதைந்து அர்த்தமற்றிருக்கின்றன வாக்கியங்கள். அகராதியே கண்டிராத புது வார்த்தைகள் அடுக்கு மொழிக்காக உருவாக்கப்பட்டுள்ளன. வாசகர்கள் இப்புத்தகத்தி

ளுல் என்ன நலனையடைந்து விடப் போகிறார்களோ? அச்சும் அமைப்பும் கவர்ச்சியாய் இருக்கின்றன.

—ஏ. எம், மீரான்

**பத்திரிகைகள் :**

## பாரதி

(இரு மாதத்துக்கு ஒரு இதழ், ஆசிரியர் : வெ. சாமிநாத சர்மா)

சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஆதரவில் நடத்தப் பெறுகிறது ''பாரதி''. இதுவரை வெளி வந்துள்ள மூன்று இதழ்களும் சிறப்பாகவே இருக்கின்றன. எழுத்தாளர் சங்க அங்கத்தினர்களுக்கு இலவசமாக அனுப்பப்படுகிறது. ஏனையோர் ஆண்டுச் சந்தா ஒரு ரூபாய் அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். கிடைக்குமிடம் : காரியதரிசி, சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கம், மௌண்ட் ரோடு, சென்னை-2. சந்தா செலுத்த இயலும் ஒவ்வொருவரும் ஒரு ரூபாய் அனுப்பி வைத்தால் எழுத்தாளர் சங்கத்துக்கு ஆதரவளித்தவர்களாவார்கள். —ஏ. எம். மீரான்

## சோஷலிஸ்ட்

வார வெளியீடு

(ஆசிரியர் : எஸ். ஆர். சுப்பிரமணியம். பக்கம் 12. விலை 0-3-0 ஆண்டுச் சந்தா ரூ. 9-0-0 காரியாலயம்: சோஷலிஸ்ட், 516, திருவல்லிக்கேணி ஹை ரோடு, சென்னை-5)

பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் சார்பிலே இப்பத்திரிகை வார இதழாக பிரசுரிக்கப்பட்டு வருகின்றது. அக்கட்சியின் கொள்கைகளையும், நோக்கங்களையும், சாதனைகளையும் விளக்கும் முறையிலே கட்டுரைகளும், கவிதைகளும் இடம் பெற்றுள்ளன. -மு. அ. வ.

## அலை ஓசை

(வாரப் பத்திரிகை, ஆசிரியர் : எஸ். சங்கரன் 114, பிராட்வே, சென்னை-1. பக்கங்கள் : 12, விலை 2 அணா).

''அலை ஓசை'' இதுவரை வெளி வந்துள்ள நான்கு இதழ்களும் கிடைத்தன. ''பார் புகழ் பாரதத்தைப் பாழ்படுத்தி வரும் பாதகர்களை மக்கள் மன்றத்தில் உண்மை சொரூபம் உள்ளபடி விளங்க குற்றவாளிகளைப் போல் கூண்டிலே நிறுத்தி வேதனை தரும் அவர்கள் செய்கையை வெட்ட வெளிச்சமாக்க'' அலை ஓசை பணி புரியும் என ஆசிரியர் கூறுகிறார். நாடு நலம் பெறச் செய்யும் முயற்சிகளில் இதுவும் ஒன்றாக இருக்கலாம். ஆனால் யாரையும் நோவினை செய்யாமல் ''அலை ஓசை'' பாடுபடுமானால் அதன் குறிக்கோள் பூர்த்தி பெறும்.

## முன்னேற்ற முழக்கம்

(ஆசிரியர் : எச். எஸ். பக்ருத்தீன், விலாசம்: 63 மார்டீஸ் லேன், கொழும்பு-12. பக்கங்கள் 16 விலை 15 சதம்).

இலங்கையிலிருந்து வெளிவரும் இந்த மாதப் பத்திரிகையின் ஜூலை, ஆகஸ்ட் இதழ்கள் கிடைத்தன. கட்டுரைகள், கதைகள், கவிதைகள், பொன்மொழித் தொகுப்பு ஆகியவை இடம் பெற்றுள்ளன.

தளரா முயற்சியுடன் இதை நடத்தும் மாணவர்கள் பாராட்டுக்குரியவர்கள். -ஏ. எம். மீரான்

### அந்த மனிதன்

ஒரு மனிதனிடம் இல்லாத நற்பண்புகள், அவனிடம் இருப்பதாகக் கூறினால் அவன் பரவசப்படுகிறான். ஆனால் அவனிடம் இருக்கும் தீய குணங்களைப் பற்றிக் குறிப்பிட்டாலோ அவன் சினந்தெழுகிறான்.

(ரஜானிபுல் அதபி)
இரண்டாம் புத்தகம்

# கேள்வியும் பதிலும்

[உங்கள் கேள்விகள் உங்களுக்கும் பிறருக்கும் நலந்தரும் பதிலைப் பெறக் கூடியவையாக இருக்கட்டும். ஏற்கனவே பதிலளிக்கப்பட்ட அல்லது பயனில்லாத கேள்விகள் அனுப்பாதீர்கள். கேள்விகள் சுருக்கமாக ஆனால் தெளிவாக இருக்க வேண்டும். கார்டில் ஒரே பக்கத்தில் எழுதி அனுப்புங்கள். கேள்விகளோடு வேறு விஷயங்களை இணைத்து எழுதாதீர்கள். யார் உள்ளத்தையும் புண்படுத்தும் நோக்கோடு கேள்வி அமையக் கூடாது. கேள்வி கேட்போர் தம் முழு விலாசத்தையும் தெரிவிக்க வேண்டும். கேள்விகளுக்குத் தரப்படும் பதில்களைத் தீர்ப்புகளாகக் கொள்ளலாகாது.

ஏராளமான கேள்விகள் வருவதால், தரமான, பொது நல முக்கியத்துவம் வாய்ந்த கேள்விகளுக்கே முதலில் பதில் தரப் படுகிறது.]

எச். ஜகரிய்யா, நாகை.

கே : மனிதன் குரங்கிலிருந்து தான் தோன்றினான் என சிலர் வாதிக்கிறார்களே, அவர்களுக்கு என்ன சொல்வது?

ப : தங்களுடைய மூதாதையர் குரங்குகள்தான் என விடாப்பிடியாகக் கூறும் அவர்கள் விஷயத்தில் நாம் ஏன் தலையிடவேண்டும்.?

எம். கே. எம். ஐயூப், கோங்குராயக் குறிச்சி.

கே : விவாகம் ஆகாதவர் பேஷ் இமாம் வேலை பார்க்கலாமா?

ப : மற்ற தகுதிகள் இருந்தால் பேஷ் இமாமாகத் தொண்டாற்றலாம்.

என். முஹம்மது தமீம் கொடிக்கால் பாளையம்.

கே: அன்புடைய ஆண்டவன் இப்ராஹீம் நபியுடைய மகனை குர்பானீ செய்யச் சொன்னதேன்?

ப : ''மணி விளக்கு'' ஹஜ் மலரில் வந்த கட்டுரைகளை ஊன்றிப் படியுங்கள்.

எம். ஏ. ரஹ்மான் ஷா, தோப்புத்துறை.

கே : திராட்சை ரசம் பருகுவதால் தவறுண்டா?

ப : அது போதை யளிப்பதில்லையாயின் அதைப் பருகுவதில் தவறொன்றுமில்லை,

ஆரஞ்சுப் பழ ரசத்தை நாம் அருந்துவதில்லையா. அது போன்றது தான், புளிக்கவைக்கப் படாத திராட்சை ரசமும்.

அது புளிக்க வைக்கப்படும் பொழுதுதான் மதியை மயக்கும் மதுவாகிவிடுகிறது. அங்ஙிலையிலே இஸ்லாத்தில் அது விலக்கப்பட்ட பொருளாகிவிடுகிறது.

கே : பன்றி மாமிசம் நமக்கு 'ஹரா'மாக்கப்பட்டது ஏன்?

ப : இஸ்லாத்தில் பரிசுத்தமான உணவே அங்கீகரிக்கப்பட்டுள்ளதால்!

அன்றி, பன்றி மாமிசம் உண்பதால் "டிரிக்கினோஸிஸ்" என்னும் தசை நோய், டிராக்குமா என்னும் கண்ணோய், கான்ஸர் என்னும் புற்று நோய் போன்ற வியாதிகள் பரவுகின்றன என மேல் நாட்டு மருத்துவர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். அதோடு இதர அனுமதிக்கப்பட்ட, பிராணிகளின் இறைச்சிகளில் கண்ணுக்குத் தெரியாத கிருமிகள் ஒட்டிக்கொண்டிருந்தால், அவை மாமிசம் வேகும்பொழுது அழிந்து விடுகின்றன. ஆனால் பன்றியிறைச்சியில் ஒட்டிக் கொள்ளும் இந்நோய்க் கிருமிகள் அவ்விறைச்சி வெந்தாலும் சாவதில்லை. அது மட்டுமல்ல பன்றியிறைச்சியில், தொற்றிக் கொள்ளும் சில கிருமிகள் 40ஆண்டுகள் வரையும் உயிர் வாழ்வதாக அமெரிக்க டாக்டர்கள் கணக்கெடுத்திருக்கிறார்கள்.

மனித அறிவு இதுவரை பன்றியிறைச்சியின் தீமையைப் பற்றித் தெரிந்து கொண்டவை இவை, ஆண்டவன் கட்டளைகளில் மனித அறிவுக்கு இன்னும் புலப்படா எவ்வளவு நன்மைகள் நிறைந்திருக்குமோ! வல்லாஹு அஃலம்.

**ம. காதர் அலி, சிட்டகாங்.**

கே: அரபிக் கல்வி பயிலாத அன்பர் ஒருவர், அவர் தொழும் போதும் 'பாத்திஹா' ஓதும் போதும் தமிழில் ஓதுகிறார். இது கூடுமா? கூடாதா?

ப: தொழுகைக்குரிய ஸூராக்களை (திருமறையின் அத்தியாயங்களை) அரபியில் ஓதவேண்டும். துஆவை தனக்குத் தெரிந்த மொழியிலே ஓதலாம்.

**கே. ஏ. ஷவ்கத் அலி, நாகை.**

கே: இறைவனின் இல்லம் என்று சொல்லப்படுகின்ற பள்ளி வாசலில் ஒரு கட்சியின் சின்னத்தை–கொடியை ஏற்றலாமா?

ப: குறிப்பிட்ட எந்தக் கட்சியின் கொடியையும் பள்ளியிலே ஏற்றுவது ஏற்றதல்ல, கட்சிகளையும், அவை பரத்தும் மாறுபட்ட கொள்கைகளையும் கடந்து, ஒரே தத்துவத்தை—இறைவன் ஏகன் என்னும் உயர் நெறியைப் பரப்பத் தோற்றுவிக்கப்பட்ட பள்ளிகளிலே கட்சிப் பூசல்களை ஏன் புகுத்த வேண்டும்?

**இ. எம். ஹனீப், சங்கரன் பந்தல்.**

கே: ஒரு மனிதன் உலகில் வாழ்வதற்குத் தேவையானது எது?

ப: பொருளும், அருளும்.

**லே. த. செய்கு, மதராஸ்.**

கே: ஒரு முஸ்லிம் திராவிடக் கட்சியில் சேருவது நன்மையா? தீமையா?

ப: நன்மையல்ல. அன்னையும் தந்தையும் அகமகிழ்ந்து இட்ட பெயர்களைக்கூட மாற்றி வைக்கும் சில வழி தவறிய இளைஞர்களை நாம் காணும்பொழுது, தீமைக்கு எவ்வாறு இது வித்திடுகிறது என்பதும் தெளிவாகிறது,

**பி. என். கே. அய்னுல் பஸீரா பேகம், ஏர்வாடி.**

கே: மூஸா நபி அவர்களுக்கு அருளப்பட்ட "தவ்ராத்" வேதத்தின் அபரானி பாஷையும் தாவூது நபி அவர்களுக்கு இறங்கிய ஸபூரின் யூனானி பாஷையும், ஈஸா நபிக்கு வந்த இஞ்ஜீலின் சுரியானி பாஷையும் இப்பொழுது எந்தெந்த நாட்டில் வழங்கி வருகின்றன? அரபி மொழி எந்த நாடுகளில் வழங்குகிறது?

ப: அபரானி (ஹீப்ரூ) இறந்த மொழிகளுள் ஒன்று எனலாம். இஸ்ராயீல் நாட்டில் யூதர்கள் அதற்குப் புத்துயிரூட்ட முயன்று கொண்டிருக்கிறார்கள். யூனானி (கிரேக்க மொழி) கிரீஸிலும் சுரியானி (ஸிரியன்) ஸிரியா, லெபனானின் சிற்சில பகுதிகளிலும் வழங்குகின்றன. அரபி மொழி ஹிஜாஸ், யமன், ஹலரமவ்து, குவயீது, பஹ்ரயின் முதலிய பகுதிகளைக் கொண்ட அரேபிய தீப கற்ப முழுவதிலும், இராக், லபனான், ஜோர்தான், ஸிரியா, எகிப்து, ஸூடான் அல்ஜீரியா, மொரோக்கோ, துனீஷியா, பலஸ்தீன் போன்ற மத்திய கிழக்கு நாடுகளிலும் இன்று வழங்கி வருகிறது.

இதன்றி, பல நாட்டு மொழிகள் இன்று அரபி எழுத்துக்களைக் கொண்டிருக்கின்றன, உதாரணமாக இந்தோ-பாகிஸ்தானத்தில் வழங்கும் உர்தூ, பஞ்சாபி, எல்லைப் புறத்திலே வழங்கும் புஷ்தூ, பலூச்சிஸ்தானத்திலே வழங்கும் பலூச்சி ஈரானில், நிலவும் பார்ஸீ, தென் கிழக்கு ஆசியாவில் வழங்கும் மலாயி போன்ற மொழிகளுக்கு இன்று அரபி எழுத்துக்களே லிபியாக இருக்கின்றன.

இன்னும் அரபித் தமிழ், அரபி, மலையாளம் ஆகியவையும் அரபி எழுத்துக்களையே அடிப்படையாகக் கொண்டவை.

இப்படியாக புனிதத் திருமறையின் அரபி மொழி பூவுலகில் பாதிக்கு மேற்பகுதியை இன்று வரை கவர்ந்திருக்கிறது.

**ஏ. அப்துல் ஹாதி, காந்திநகர், சென்னை 20.**

கே: ஸுன்னத் ஜமாஅத்தாருக்கும் ஷியாக்கூட்டத்தாருக்கும் உள்ள அடிப்படை வேறுபாடுகள் எவை. ஸுன்னத் ஜமாஅத்தினர் ஷியாக்களின் பள்ளியில் சென்று தொழலாமா?

ப: நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய மறைவுக்குப்பின் அவர்கள் மருகர் அலீ (ரலி) அவர்களே இஸ்லாமிய உலகின் தலைமைப் பதவிக்கு உரியவர்கள் எனவும் அவர்களுக்குப்பின் அவர்களுடைய சந்ததியினரே ஆண் வாரிசுகள் முறையில் கிலாபத் அல்லது இமாமத் பதவியைத் தொடர்ந்து பெற்றிருக்க வேண்டுமெனவும் ஷியாக்கள் நம்புகிறார்கள். "ஷீஆ" எனும் அரபிப் பதத்துக்கு, பின் பற்றுவோர் என்று அர்த்தம். ஹஜ்ரத் அலீ (ரலி) அவர்களைப் பின் பற்றுவோர் என்ற பொருளில் அதை உபயோகிக்க ஆரம்பித்தார்கள். இக் கட்சி ஹஜ்ரத் ஹுஸைன் (ரலி) அவர்களின் தியாகத்தை தன் சக்தியை அதிகரிக்கப் பயன்படுத்திக் கொண்டது. பாரசீக தேசத்தின் கடைசி மன்னன் யஜ்தஜர்தின் மகளுக்கும், ஹுஸைன் (ரலி) அவர்களுக்கும் பிறந்த ஜைனுல் ஆபிதீன் அவர்கள் தாய் வழியில் பாரசீக ராஜ்யத்திற்குரியவர் என்று அந்நாட்டு மக்கள் கருதியதனால் அங்கு உரம்பெற்று வளர்ந்த இயக்கம் நாளடைவில் கெய்ரோவில் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையே ஸ்தாபிக்க உதவியது.

ஷியாக்கள் கலிமா சொல்லும் போது "அஷ்ஹது அன்ன அலிய்யுன் வலியுல்லா" (அலீ (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் அன்பர் என்று உறுதி கூறுகிறேன்) என்று சேர்த்துக்கொள்ளுவார்கள். அலீ (ரலி) அவர்கள்மீதும் அவர்கள் சந்ததியினர்மீதும் ஷியாக்களுக்குள்ள பற்றுதலானது செயலில், ரஸூல் (ஸல்) அவர்களைக்கூடக் குறைவாக மதிக்கும் அளவுக்குப் போய் விட்டது.

இறைவனுக்கும் அவனுடைய இறுதித் தூதருக்கும் ஈமான் கொண்டு, திருமறையையும், நபிகள் பெருமானாரின் ஸுன்னத்தையும் பின் பற்றி நடப்போருக்கு "அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத்" என்ற பெயர், ஹிஜ்ரீ இரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலே கலீபா ஹாரூனர் ரஷீதின் காலத்தில்தான் ஏற்பட்டது.

ஸுன்னத் ஜமா அத்தினர் ஷீயாக்களின் பள்ளியில் சென்று தனித்துத் தொழுவதில் தவறு ஒன்றுமில்லை.

**ஹேச். நாகூர் ஷா, சென்னை.**

கே: கம்யூனிஸம், இஸ்லாம் இரண்டுக்கும் அதிக வேற்றுமை யில்லை என்று கூறப்படுகிறது. கார்ல் மார்க்ஸின் தத்துவங்களுக்கும், இஸ்லாமிய கொள்கைகளுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை வரையறுத்துக் கூற முடியுமா?

ப: கம்யூனிஸத்தையோ, இஸ்லாத்தையோ பற்றி எழுதப்பட்டுள்ள புத்தகங்களின் முன்னுரைகளைக் கூட படித்துப் புரிந்து கொள்ளாதவர்களே இரண்டுக்கும் அதிக வேற்றுமை இல்லை என்று கூறுவார்கள். இவ்விரண்டிற்கும் அதிக வேற்றுமை இல்லையென்பதென்ன, அடிப்படையே வேறுபட்டதாகும், சரியாகச் சொல்வதானால் முரண்பாடு அதிகம் என்று கூறலாம். இறையுணர்வின் அடிப்படையில் அமைந்தது இஸ்லாம். அந்த அடிப்படையைத் தகர்ப்பது கம்யூனிஸம். மதம் மக்களுக்கு அமுதம் என்பது இஸ்லாம், அபினி என்பது கம்யூனிஸம்.

தனி மனிதனின் சொத்துரிமையிலிருந்து குழந்தை வளர்ப்பு வரை இஸ்லாமும், கம்யூனிஸமும் வேறுபட்ட கொள்கைகளைக் கொண்டிருக்கின்றன. —முல்லா




Edited, Printed and Published by A. K. A. Abdus Samad, at "MANI VILAKKU PRESS" 114, Angappa Naick St., Madras-1.

